# கல்கி

KALKI
31.8.86
ரூ.1.50



# ஸர்ஃப் வாங்குவது மேலும் புத்திசாலித்தனம்

''தெரிஞ்சே சொல்றேன்: ஸர்ஃப் வாங்கறதைப் போல புத்தியுள்ள காரியம் எதுவுமே இல்லே. பவர் பேக்டு தயாரிப்பு ஆச்சே. அபார சக்தி—கொடுத்த பணத்துக்கு அமோகமாப் பலன்.''

**அமோகமாப் பலனு? ஸர்ஃப் விலேதான் அதிகமாச்சே, லலிதாம்மா?**

''அண்ணாச்சி, எத்தனே விதமா லாபம் தருது, உங்க கண்ணுல படலியா? ஸர்ஃப் ஒண்ணுதானே எதையும் வெள்ளே வெளேர்னு வெளுக்குது. அதனால, பார்வைக்கு எப்பவுமே புதுக்கருக்குதான். எந்த நாளுமே பண மிச்சம். கணக்குப் பாருங்க—அமோகமாப் பலன்னு இதானே?''

**சரி, அப்படி என்னதான் இருக்கு ஸர்ஃப்லே?**

''நிறையவே இருக்கு. அளவுக்கு அளவு 1 கிலோ சாதா பவுடருக்கு ஈடு ஒரு ½ கிலோ ஸர்ஃப். அதாவது 1 கிலோ சாதாப் பவுடர் எவ்வளவு துணிகளே வெளுக்குமோ, அதையே பாதி அளவு ஸர்ஃப் வெளுத்திடும். பார்த்துக்குங்களேன், ஸர்ஃப் நமக்கு அதிக லாபம்தானே?''

| 1 கிலோ சாதா பவுடர் |  |  | ½ கிலோ ஸர்ஃப் |
|---|---|---|---|

**அப்ப ஸர்ஃப் ஒரு வகையில ஈடு செய்துடுது?**

''ஏன், பல வகையில லாபம் நமக்கு. மலிவுச் சரக்கு வாங்கறதுக்கும் மதிப்புள்ள பண்டம் வாங்கறதுக்கும் வித்தியாசம் உண்டே. அதனாலதான் சொல்றேன் ஸர்ஃப் வாங்கறதுதான் மேலும் புத்திசாலித்தனம்.''




இந்துஸ்தான் [illegible]ின் தரமான தயாரிப்பு

# கொக்கேய்ன் குழந்தைகள்

## — அமெரிக்காவில் ஒரு பரிதாபம்

பிறந்தது முதல் ஓயாமல் அழுது கொண்டிருக்கிறது ஒரு குழந்தை; சராசரி குழந்தைகளைப் போல் அதனால் நாக்கை நீட்டவோ பாலை உறிஞ்சிக் குடிக்கவோ முடியவில்லை. அதன் சின்ன உடலைத் தொட்டாலே அதற்குத் தூக்கி வாரிப் போடுகிறது. அதன் கண்கள் பார்வை பழக மறுக்கின்றன…

அருகிலேயே இன்னொரு குழந்தை 'இன்குபேடருக்குள்' அசையாமல் கிடக்கிறது. அதன் பிஞ்சு உடல் முழுவதும் குழாய்கள் செருகப்பட்டு இருக்கின்றன. மூச்சு விடுவதற்கு ஒரு கருவி, மூளையில் சேர்ந்து போகும் நீரை அகற்ற ஒரு கருவி என்று இயந்திரங்களையே முற்றிலும் நம்பி உயிர் அக்குழந்தையிடம் ஒட்டிக் கொண்டிருக்கிறது. பிறந்த ஒரு மாதத்துக்குள் இரண்டு முறை 'ஸ்ட்ரோக்' வந்துவிட்டது இந்தக் குழந்தைக்கு.

இவ்விரண்டு குழந்தைகளும் பிறந்தது முதலே சித்திரவதை அனுபவித்து வரக் காரணம் அக்குழந்தைகளின் தாய்மார்களுக்கு இருந்த பயங்கரமான தீய பழக்கம்தான் என்று டாக்டர்கள் தீர்மானமாய்ச் சொல்கிறார்கள்.



கொக்கேய்ன் என்ற போதைப் பொருளுக்கு அடிமையாகி, அதிலிருந்து மீள முடியாமல் பேறு காலத்திலும் அதை உபயோகித்ததால்தான் அவர்களுடைய குழந்தைகளின் உடல்நிலை இப்படி பாதிக்கப்பட்டுள்ளது. தாயின் கருவுக்குள் இருந்த பத்து மாதங்களில் அவள் உபயோகித்த கொக்கேய்னுக்குப் பழகிப் போன கரு, பிறக்கும் போதே கொக்கேய்னுக்கு அடிமையாகப் பிறக்கிறது. பிறந்ததுமே அதற்கு கொக்கேய்ன் தேவைப்படுகிறது. அது கிடைக்காததால் சொல்லொணா வேதனையும் அவஸ்தையும் படுகிறது. போதைப் பொருளுக்கு அடிமையான ஒருவர் அதனைக் கைவிடும் போது அனுபவிக்கும் உடல், மன, உணர்வுத் துன்பங்களையெல்லாம் பிறந்த விநாடியிலிருந்தே அந்தக் குழந்தை அனுபவித்துத் தவிக்கிறது.

அமெரிக்காவில் மியாமி நகர ஜாக்ஸன் மெமோரியல் ஆஸ்பத்திரியில் தினமும் இப்படிப்பட்ட 'அடிமைக் குழந்தைகள்' இரண்டு அல்லது மூன்று பிறக்கின்றன. சில நேரங்களில் அவை, 'கொக்கேய்ன் குழந்தைகள்' என்பதைக் கண்டுபிடிப்பதே கடினமாக இருக்கிறது. எல்லாக் குழந்தைகளையும் போல் அவை நிறைய அழவும் தூங்கவும் செய்கின்றன. தாயின் பழக்க வழக்கங்கள் பற்றிய முழு விவரங்களை அறிந்திருந்தால் மட்டுமே குழந்தையின் போக்கை உடனே சந்தேகிக்கத் தோன்றும். சில நேரங்களில் குழந்தைகளின் விநோதமான போக்கு அவற்றைக் காட்டிக் கொடுக்கின்றன. முரட்டுப் பிடிவாதத்துடன் கூடிய அழுகையும் அடமுமாக அலறும் குழந்தைகள் அடுத்த கணமே எந்தவிதக் காரணமுமின்றி அழுகையை நிறுத்திவிட்டுத் தூங்கி விடுகின்றன. இந்த மாதிரிக் குழந்தைகள் கை, கால்களை முரட்டுத்தனமாக உதறும் போது அவற்றுக்கு அடிபட்டுவிடாதவண்ணம் அவற்றைத் துணிகளில் சுற்றி வைப்பதோடு டாக்டர்கள் திருப்தி அடையவேண்டியுள்ளது. கொக்கேய்னின் பிடியிலிருந்து அவற்றை விடுவிக்க மாற்று மருந்து கொடுத்தால் அந்த மாற்று மருந்துகளினால் ஏற்படக்கூடிய பின்விளைவுகள் மிகப் பயங்கரமானவை. எனவே இதே கஷ்டத்துக்குப் பெரியவர்கள் பெறக் கூடிய வைத்திய உதவியைக் கூட பாவம், இந்தக் குழந்தைகள் பெற முடிவதில்லை.

வயிற்றில் இருக்கும் குழந்தையைப் பாதிக்கும் என்று அஞ்சி ஆஸ்பிரின் கூடச் சாப்பிட மறுக்கும் பெண்கள் கொக்கேய்ன் பிடியிலிருந்து தங்களை விடுவித்துக் கொள்ள முடியாமல் அதனை நாடிச் சென்று விடுகிறார்கள். இதனால் குறைப் பிரசவமோ, அபார்ஷனோ ஆவதற்கான சாத்தியக் கூறுகள் அதிகரிப்பதோடு பிறக்கும் குழந்தையின் நுரையீரல் மற்றும் மூளை பாதிக்கப்படும் ஆபத்தும் உள்ளது.

மேல்நாட்டுப் பழக்க வழக்கங்களில் தேவையற்றதைத்தான் முதலில் நமதாக்கிக் கொள்கிறோம். அந்த வகையில் போதை மருந்துப்பழக்கம் இந்திய இளைஞர்களிடையே பெண்களிடமும் இன்று அச்சமூட்டும் வகையில் பரவி வருகிறது. இந்தியா கொக்கேய்ன் குழந்தைகளை உருவாக்காமலே இருக்கும் என்று நம்புவோம்.

நன்றி: **நியூஸ் வீக்**

# வீரப்பன் வெற்றி பெறுவாரா?

**நெல்லை, அருப்புக் கோட்டை — நேரடி ரிப்போர்ட்!**

இடைத் தேர்தலுக்கு இன்னும் பதினைந்து நாட்களே பாக்கியிருக்கும்போது, நிலவரங்களை அறிந்து கொள்ள, திருநெல்வேலிக்குப் பக்கத்து நகரமான பாளையங் கோட்டையிலேயே இறங்கி, ஒரு பொடி நடை போட்டோம்.

வழியிலேயே, தி.மு.க. வேட்பாளர், வழக்கறிஞர் ஏ.எல். சுப்ரமணியத்தைச் சுலபமாகச் சந்திக்க முடிந்தது. தேர்தல் பிரசாரத்திற்காக காரில் சென்று கொண்டிருந்தவரை நிறுத்தி (வழி மறித்து) விசாரித்தோம்.



* ஏ.எல். சுப்பிரமணியம் (தி.மு.க.)



* ஜெகதீச பாண்டியன் (இந்து முன்னணி)

* பஞ்சவர்ணம் (அ.தி.மு.க.)

''தி.மு.க.வுக்கு வெற்றி வாய்ப்பு எப்படியிருக்கின்றது?''

''இந்தத் தடவை, நாங்கள் நிச்சயமாக வெற்றி பெறுவோம் என்றநம்பிக்கைஇருக்கின்றது!'' என்று உற்சாகத்துடன் பதிலளித்தார்.

''கலைஞர் கருணாநிதி, நெல்லைத் தொகுதியை வீரப்பனுக்கு விட்டுக் கொடுக்கப்போவதாகவும், அருப்புக்கோட்டையிலேயே அவர் அதிகக் கவனம் செலுத்துவதாகவும், சொல்கிறார்களே....?''

''அப்படியெல்லாம் ஒன்றுமில்லை! இந்த இரண்டு தொகுதிகளும் அவருக்கு இரண்டு கண்களைப் போன்றவை. இரண்டு தொகுதிகளிலும் சம அளவில் பிரசாரம் செய்கிறார். ஒரு தடவை இரண்டு தொகுதிகளுக்கும் வந்து விட்டுப் போனார். இரண்டாவது கட்டமாக, வருகிற 18 ஆம் தேதி இங்கு பிரசாரம் செய்யவிருக்கிறார். இறுதிக் கட்டமாக, 25 ஆம் தேதிக்கு மேல் இரண்டு தொகுதிகளிலும் பிரசாரம் செய்ய விருக்கிறார்.''



* தங்கபாண்டியன் (தி.மு.க.)

''கடந்த பொதுத் தேர்தலில் அ.தி.மு.க. வெற்றி பெற்றது வெறும் அனுதாப அலையினால் தான்! இந்திரா காந்தியின் படுகொலை, எம்.ஜி. ஆரின் உடல்நிலை எல்லாமுமாகச் சேர்ந்து பெற்றுத் தந்த வாக்குகள் தான் அவர்கள் பெற்றவை! ஆனால், அதற்குப் பின்னால் மக்கள் உண்மைநிலையை உணர்ந்துகொண்டதால்தான், நகராட்சி, பஞ்சாயத்து தேர்தலில் எங்களால் மிகுந்த வாக்குகளைப் பெற முடிந்தது!''

''அ.தி.மு.க.விலுள்ள தற்போதைய உட்கட்சிப் பூசல், உங்களுக்கு வெற்றி வாய்ப்பை அதிகரிக்கச் செய்யும் என்று கணிக்கலாமா?''

''நாங்கள் மக்கள் சக்தியை மட்டுமே நம்புகிறோம். அ.தி.மு.க.விலுள்ள உட்கட்சிப் பூசலை, நாங்கள் நம்பிக் கொண்டிருக்கவில்லை! நான் இதே தொகுதியில் பிறந்து, வளர்ந்து, படித்து வழக்கறிஞராக வேலை பார்ப்பவன். மக்கள் என்னை நன்கு அறிவார்கள். 1967ல் இதே தொகுதியில் போட்டியிட்டு, பேரறிஞர் அண்ணா அவர்கள் தலைமையில் சட்டமன்ற உறுப்பினராக இருந்த

''இதே தொகுதியைச் சேர்ந்த நீங்கள், 1984ல் நடந்த பொதுத் தேர்தலில்இங்குபோட்டியிட்டு, சுமார் 20,000 வாக்குகள் வித்தியாசத்தில் வெற்றி வாய்ப்பை இழக்கக் காரணம் என்ன....?''

* கிராம மக்களின் குறைகளைக் கேட்டறிகிறார் அமைச்சர் ஆர்.எம்.வீ.



போது, இந்தத் தொகுதி மக்களுக்கு என்னென்ன நன்மைகள் செய்தேன் என்பதையும் மக்கள் நன்கு அறிவார்கள். ஆளுங்கட்சியைப் போன்று எங்களிடம் பண பலமோ, அதிகார பலமோ இல்லையென்றாலும், ஜனநாயக முறைப்படி தேர்தல் விதிப்படி, அமைதியான முறையில் வேட்பாளர்களைச் சந்தித்து, ஆதரவு கேட்கிறோம்!'' என்றார், ஏ.எல். சுப்ரமணியன்.

ஆதரவு திரட்டும் அவசரத்தில் அவர் காணப்பட்டதால் மேலும் அவருடைய நேரத்தை எடுத்துக் கொள்ள விரும்பாமல் அவரை விட்டுவிட்டோம்.

அங்கிருந்து பாளையங்கோட்டை நகர் மன்றத்தினுள் நுழைந்தபோது, அவசர



• தங்கபாண்டியனுக்காகப் பிரசாரம் செய்ய வந்த அன்பழகன்

அவசரமாக அங்கு வந்த நகர்மன்றத் தலைவர், சுப. சீதாராமன், ''இந்தத் தேர்தலில் நிறைய தில்லுமுல்லுகள் நடக்கின்றன....!'' என்று சொல்லி, எங்கள் ஆவலைத் தூண்டிவிட்டபடியே அலுவலகத்தினுள் நுழைந்தார். தேர்தல் தில்லுமுல்லுகள் என்னென்ன என்பதை அறிய, நாங்களும் அவரைப் பின்தொடர்ந்தோம்.

அரசு வாகனங்கள், அரசு அதிகாரிகள், அரசின் செய்தி மக்கள் தொடர்பு அலுவலர்கள் — வீரப்பனுக்கு ஆதரவு திரட்டும் பணியில் ஈடுபடுத்தப்பட்டுள்ளனர். அரசாங்க ஜீப்புகளின் நம்பர் பிளேட்டை மாற்றி.... தேர்தல் பிரசாரத்திற்குப் பயன்படுத்துகிறார்கள்! இன்னும் சொல்லப் போனால், நெல்லை திருவள்ளுவர் மேம்பாலத்தின் இரண்டு பக்கங்களிலும் உள்ள விளக்குக் கம்பங்களிலும் சிறிய மின்சார பல்புகளினால் செய்யப்பட்ட இரட்டை இலை வடிவங்களை அமைத்து, அவற்றிற்கு மின்சாரக் கம்பங்களிலிருந்து மின்சார இணைப்பு தொடுத்திருக்கிறார்கள்!

இவ்வாறு தேர்தல் விதிமுறைகள் அனைத்தும் ஆளுங்கட்சியினரால் மீறப்படுகின்றன. இவற்றையெல்லாம் கண்டித்து, இந்தத் தேர்தல் அதிகாரியை மாற்றும்படிக் கோரி இன்றைக்கு நடைபெற்ற மாவட்ட ஆட்சித் தலைவரின் அனைத்துக் கட்சிக் கூட்டத்தில் நாங்கள் (தி.மு.க.வினர்) வெளிநடப்பு செய்து விட்டோம்!'' என்றார் பாளை நகர்மன்றத் தலைவர் சுப. சீதாராமன்.

''இந்த இடைத்தேர்தலையொட்டி, நெல்லை நகராட்சிக்குச் சுமார் ஒரு கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கிறார்களாமே....? பாளை நகராட்சிக்கு ஒன்றும் தரவில்லையா?'' என்று நாங்கள் கேட்டதும் —

''நெல்லை இடைத் தேர்தலையொட்டி,





• மிசா சாமிக்கண்ணு

அந்நகராட்சிக்கு முதல் கட்டமாக ஐம்பது லட்சமும், இரண்டாவதாக ஐம்பது லட்சமுமாக ஒரு கோடி ரூபாய் ஒதுக்கியிருப்பது உண்மைதான். ஆனால், பாளையங்கோட்டை நகராட்சியின் நன்மைக்காக, எண்பத்திரண்டு லட்சத்திற்கு ஒரு திட்டமும், இருபது லட்சத்திற்கு மற்றொரு திட்டமும் தயார் பண்ணி, அனுப்பியபோது, அவற்றை இந்த அரசு நிராகரித்துவிட்டது. கடந்த மாதம் சென்னை சென்றபோது, ப.உ.ச.வை நேரில் சந்தித்து, 'திருநெல்வேலிக்கு ஒதுக்கியிருக்கும் தொகையில் பாதி அளவாவது பாளைக்குத் தரக்கூடாதா?'' என்று கேட்டபோது, 'பரிசீலனை செய்கிறேன்!' என்றார். அவ்வளவு தான். வேறு பதிலில்லை!

''தி.மு.க. தேர்தல் பிரசாரம் எப்படி நடக்கின்றது...?''

''செல்லும் இடங்களிலெல்லாம் தி.மு.க.வுக்கு நல்ல ஆதரவு கிடைக்கின்றது. ஆனால், அ.தி.மு.க. வில் அப்பாவி மக்களை காவல் துறை மூலம் மிரட்டி, வாக்குகளைச் சேகரிக்க முயற்சி செய்கிறார்கள். நெல்லைத் தொகுதியில் சைவ வேளாளர்கள் மிக அதிகம். அவர்களின் வாக்குகளை ஒட்டு மொத்தமாகப் பெற, அமைச்சர் வீரப்பன், 'சைவ வேளாளர்களை (பிள்ளைமார்கள்) பிற்படுத்தப்பட்டோர் வகுப்பில் சேர்ப்போம்!' என்கிறார். இது சுத்தமாகத்

• வை. பாலசுந்தர் (தி.மு.— எம்.எல்.ஏ.)



• சுப. சீதாராமன் (பாளை நகர்மன்றத் தலைவர்)



தேர்தல் மோசடியாகும். மேலும் எம்.ஜி. ஆரின் தனிச் செயலாளர்களான சிவக் கொழுந்து, முருகன் ஆகியோர் சைவ வேளாளர்கள். இவர்களும் அச்சமூகத் தலைவரைச் சந்தித்து வீரப்பனுக்கு ஆதரவு திரட்டுகிறார்கள். ஆனால் சைவ வேளாளர்கள் ஒற்றுமையாக இருக்கின்றனர். அவர்களுடைய ஒட்டுமொத்தமான வாக்குகள் அதே சமூகத்தைச் சேர்ந்த தி.மு.க. வேட்பாளரான, ஏ.எல். சுப்பிரமணியத்திற்குத் தான் கிடைக்கும் என்பதில் சந்தேகமில்லை!'' என்று முடித்தார்.

அவரிடம் விடை பெற்று இந்து முன்னணி ஆதரவுடன் போட்டியிடும் வேட்பாளர் ஜெகதீச பாண்டியனைச் சந்திக்கச் சென்றோம். அங்கு, அவருக்கு ஆதரவு திரட்டும் பணியில் முழுமூச்சுடன் ஈடுபட்டிருக்கும் இந்து முன்னணி பிரமுகர் வை. பாலச்சந்திரனிடம் எங்கள் கேள்விக் கணைகளைத் தொடுத்தோம்.

''இதுவரை, பொதுத் தேர்தலில் போட்டியிடாத இந்து முன்னணி, இந்த இடைத் தேர்தலில் பிரகாரத்தில் இறங்க வேண்டிய அவசியமென்ன....?''

''இதுவரை நடைபெற்ற பொதுத் தேர்தல்களில் இந்து முன்னணி போட்டியிடாதது உண்மைதான். ஆனால், கடந்த நகராட்சித் தேர்தலில் போட்டியிட்டிருக்கிறோம். இந்தத் தேர்தலில், அறநிலையத்துறை அமைச்சரே போட்டியிடுகிறார். எங்களுக்கு அறநிலையத் துறை நிர்வாகத்தின் மீது மனக்குமுறலே உண்டு. அ.தி.மு.க.வின் ஆட்சியில்தான், அறநிலையத் துறையில், பல அதிகார துஷ்பிரயோகங்களும், ஆலயங்களிலுள்ள சொத்துக்கள் கொள்ளையடிக்கப்படுவதும், குற்றவாளிகளைக் கண்டுபிடித்த பிறகும் தக்க நடவடிக்கை எடுக்காததும் வாடிக்கையாகி விட்டன. ஆகவே, 'அரசே! ஆலய ஊழியர்களை அரசு ஊழியர்களாக்கு! அவர்களுக்குப் போதுமான சம்பள உயர்வைக் கொடு! கோயில்களில் நடைபெறும் கொள்ளைகளைத் தடுத்து நிறுத்து!' — போன்ற பதினொரு அம்சக் கோரிக்கையை வலியுறுத்தவே நாங்கள் இத்தேர்தலில் இறங்கியிருக்கிறோம்!

''அமைச்சர் ஆர்.எம்.வீ. மாநில இந்து முன்னணித் தலைவர் ப. தாணுலிங்க நாடாரைச் சந்தித்து உங்கள் ஆதரவு வேட்பாளரை வாபஸ் வாங்கச் சொன்னாராமே?''

''அப்படி ஒரு சம்பவம் நடந்தது உண்மைதான்! ஆனால் நாங்கள் அந்தக் கோரிக்கையை ஏற்க மறுத்துவிட்டோம். நாங்கள் வெற்றி பெற்று அறநிலையத்துறை அமைச்சரிடம் சட்டசபையில் கேட்க வேண்டிய கேள்விகளை, இங்கே அதே அமைச்சர் போட்டியிடுவதால், இங்கேயே அவரிடம் கேட்க முடிகிறது. எங்களுக்கு இந்தத் தொகுதியே சட்டசபை மாதிரி தான். அத்தகையதொரு அரிய வாய்ப்பை இழக்கமனமில்லாமல்தான்வலுக்கட்டாயமாகப் போட்டியிடுகிறோம்!''

''உங்களுக்கு முதலில் கோயில் தேர்ச் சின்னத்தை ஒதுக்கிவிட்டு பிறகு அது அறநிலையத்துறை அமைச்சர் வீரப்பனுக்கு பாதகமாக முடியும் என்பதால் இரவோடு இரவாக மாற்றினார்களாமே...? அதற்கு நீங்கள் எப்படிச் சம்மதித்தீர்கள்?''

''முதலில் தேர்ச் சின்னத்தைத் தந்து விட்டு, தேர்தல் விதிமுறைக்கு மாறாக, இரவில் வேட்பாளரை அழைத்துச் சேவல் சின்னம் கொடுத்தார்கள். இது, அகில இந்திய அரசியலில் நடக்காத ஒன்றாகும்! இதைக் காரணம் காட்டியே, இந்தத் தேர்தலை நடைபெறாமல் செய்ய முடியும். ஆனால், மக்கள் வரிப் பணம் வீண் விரயமாகிவிடுமே என்பதால் இரண்டாவதாகத் தந்த சின்னத்தை ஏற்றுக் கொண்டோம். மேலும், சேவல், முருகனின் கொடிச் சின்னமாகும். திருச்செந்தூர் சுப்பிரமணியப் பிள்ளை கொலை விவகாரத்தைப் பற்றி எங்கள் சின்னமே, அறநிலைய அமைச்சரிடம் நீதி கேட்கும்!'' என்றார் வை. பாலச்சந்தர்.

மூந்திய நாள், அவசர அவசரமாக முதல்வரைப் பார்க்கச் சென்ற ஆர்.எம்.வீ. நெல்லைக்கு வந்திருப்பதை அறிந்து, அவரைச் சந்திக்க, வண்ணாரப் பேட்டையிலுள்ள அரசினர் பயணிகள் தங்கும் விடுதிக்குச் சென்றோம்.

ஏராளமான அரசு வாகனங்கள் அந்தக் காம்பவுண்டில் நின்றிருந்தன. கட்சியினர் நிறைந்து காணப்பட்டனர்! கறுப்பு, வெள்ளை சிவப்பு கரை போட்ட வேஷ்டிகள், எம்.ஜி. ஆர். உருவம் பொறித்த மோதிரங்கள், பேட்ஜுகள், சகிதமாக அமைச்சர் தங்கியிருந்த அறைக்கு முன்பு கூடி நின்றனர்.

அமைச்சரைச் சந்திக்க, முதலில் உதவி செய்தி — மக்கள் தொடர்பாளரைச் சந்தித்தோம். எங்களைப் பற்றி நன்கு விசாரித்து விட்டு, ''அமைச்சரைப் பிறகு சந்திக்கலாம்!'' என்று சொல்லிவிட்டார்.

அப்பொழுது மணி, மதியம் 2.30.

* பொன்னம்பலம்



* கோமதியம்மாள்

காத்திருக்கிறோம், காத்திருக்கிறோம். அமைச்சர் சாப்பிடுகிறார், தூங்குகிறார் என்றெல்லாம் சொல்கிறார்கள்! மாலை 5.30 மணி. 'அய்யா இப்ப தொகுதி மக்களைச் சந்திக்கக் கிளம்புகிறார். நீங்களும் வாருங்களேன்!'' என்று அன்புக் கட்டளையிட்டார், பி.ஆர்.ஓ.

அமைச்சர் ஆர்.எம்.வீ. அறையிலிருந்து வெளியே வருகிறார். தயாராக வைத்திருந்த மாலையை அணிவிக்கிறார்கள். அவருடைய காருக்கு முன்னால் ஐந்து கார்கள், பின்னால் ஐந்து கார்கள் தொடர, இரண்டு ஜீப் நிறைய போலீஸ்காரர்கள் வர, நிருபர்கள் கூட்டத்தோடு, அமைச்சர் பவனி வரத் தொடங்கினார்.

முதலில் கீழ் நத்தனம் என்ற கிராமத்தில் ரோட்டை அடைத்துக் கொண்டு கார்கள் நின்றன. அமைச்சரோடு, எல்லோரும் கூட்டமாகக் கிராமத்ினுள் நுழைந்தனர். முன் ஏற்பாடாக வாங்கி வைக்கப்பட்டிருந்த மாலைகள், துண்டுகளை அணிவிக்கிறார்கள். மனுக்களைக் கொடுக்கிறார்கள்.

அமைச்சருடன் சென்ற பொதுப் பணித்துறை, மின்வாரியம், செய்தி — மக்கள் தொடர்பு அதிகாரிகளிடம் மக்களுக்கு உடனடியாகச் செய்ய வேண்டிய உதவிகளைச் சொல்கிறார். அதிகாரிகள் குறித்துக் கொள்கிறார்கள். 'பளிச்.... பளிச்' சென்று காமிராக்கள் அவற்றைப் படம் பிடிக்கின்றன. பெண்களிடமும் குறைகளைக் கேட்டு வாக்குகளைச் சேகரித்தார்.

அந்தக் கிராமத்திற்குப் புதிதாகப் போடப்பட்ட ரோடு, புது மணப் பெண் போன்று மெருகு குலையாமல் காட்சியளித்தது! அமைச்சரும் கும்பலும் கிராமத்திற்குள் வாக்குக் கேட்கச் சென்றதும், நாங்கள் பின் தங்கி, ஆச்சரியத்தால் திறந்த வாயை மூடாமல் நின்றிருந்த பெண்களை நெருங்கி, ''அம்மா.... உண்மையைச் சொல்லுங்கள்! உங்களுக்கு இவர்கள் என்னென்ன உதவிகளைச் செய்தார்கள்?'' என்று கேட்டதும் —



* பெரியாச்சி



* திருமதி மீனா வேலாயுதம்பிள்ளை

பெரியாச்சி என்ற பெண், ''எங்களுக்கு சேலையெல்லாம் தந்தாங்க. ஆண்களுக்கு வேட்டி கொடுத்தாங்க. குழந்தைகளுக்கு சிருடை தந்தாங்க. இன்னும் ரோடு, பஸ் வசதி, குடி தண்ணீர் எல்லாம் செய்திருக்காங்க. அவங்களை மறக்கலாமுங்களா?'' என்றாள்.

அதற்கு மேலும், அமைச்சருடன் செல்ல எங்களுக்கு விருப்பமில்லாமல், கழன்று கொண்டு பஸ் பிடித்து (தேர்தல் உபயம்) நெல்லைக்கு வந்துவிட்டோம்.

**தா**மிரபரணி ஆற்றங்கரையோரத்தில் ஒரு சாராயக் கடை. அதைத் தொட்டு சிதறிக் கிடக்கும் சின்னச் சின்னக் குடிசைகள். ஒரு குடிசையின் முன்பு கோமதியம்மாள் என்ற எழுபது வயதுக் கிழவி உட்கார்ந்திருந்தாள்.

''பாட்டி.... நீங்க யாருக்கு வோட்டுப் போடுவீங்க?'' என்று கேட்டதும்,

''இரட்டை இலைக்குத்தாம்பா....!'' என்றாள்.

''இரட்டை இலைக்கு ஏன் போடுறீங்க?''

''பத்து வருஷமா இரட்டை இலைக்குப் போட்டுப் போட்டுப் பழகிப் போச்சுப்பா!'' என்று அந்தப் பாட்டி பொக்கை வாயால் சொன்னாள்.

அங்கிருந்து நெல்லை டவுனுக்கு வந்தோம். பொன்னம்பலம் என்ற வழக்கறிஞரைச் சந்தித்தோம்.

''இதே தொகுதியில் முன்பு போட்டியிட்டு வென்ற ஜி.ஆர். எட்மண்ட், நெடுஞ்செழியன், பாளை. நாராயணன் — ஆகியோர்களினால் இந்தத் தொகுதிக்கு ஒரு நன்மையும் கிடைக்கவில்லை. கடந்த தேர்தல்களில் அ.தி.மு.க. வெற்றி பெற அரிஜனங்களின் வாக்குகள் கணிசமாகக் கிடைத்தன. ஆனால், இப்பொழுது அரிஜன்கள் சார்பில் முருகேசன் என்பவர் போட்டியிடுகிறார். அவரை வாபஸ் வாங்கச் செய்ய அ.தி.மு.க. வினரும் உயர் அதிகாரிகளும் எவ்வளவோ முயற்சி செய்தனர். ஆனால் முடியவில்லை! ஆளுங்கட்சியினரின் போக்கு மக்களுக்கு வெறுப்பை உண்டாக்கிவிட்டது. ஆகவே, இந்தத் தேர்தலில் தி.மு.க.வுக்கு அதிகமான ஆதரவு கிடைக்கலாம்; கிடைக்கும்!'' என்று சொன்னார்.

வ.உ.சி. தெருவைச் சேர்ந்த திருமதி மீனா வேலாயுதப் பிள்ளை, என்ற பெண்மணி, ''அ.தி.மு.க. தாய்க்குலம்.... தாய்க்குலம்... என்று சொல்லி ஏமாற்றுகிறது. இவர்கள், தேர்தலுக்காகக் கோடிக் கணக்கில் செலவு செய்யும் ரூபாய் யாருடைய பணம்? பெரும் பகுதி மக்களின் வரிப் பணமல்லவா? அதைத் தங்களுடைய ஆதாயத்திற்காக இவர்கள் இப்படி வீண் விரயம் செய்யலாமா?'' என்று கேட்டார்.

**நெ**ல்லைத் தொகுதியில் தேர்தல் சூடு பிடிக்கவில்லை. மக்கள் அவரவர் வேலைகளில் ஈடுபட்டிருக்கின்றனர். யாரும் தேர்தலை லட்சியம் செய்தது போலத் தெரியவில்லை. அடிக்கடி தேர்தலைச் சந்தித்துச் சந்தித்து.

• நெல்லையில் பானர்கள் போட்டி





• புதிதாகப் போடப்பட்ட அடிகுழாய்

அவர்களுக்கே அலுத்துவிட்டதோ, என்னவோ?

நெல்லை மாவட்டச் செயலாளர், கருப்பச் சாமி பாண்டியனுக்கு இந்தத் தொகுதியில் போட்டியிட அனுமதி கொடுக்காததோடு, அமைச்சர் ஆர்.எம்.வீ. அவரை அலட்சி யம் பண்ணியதால் அ.தி.மு.க. தொண்டர் கள் பலர் மனம் குமுறுகின்றனர்.

தொகுதி அ.தி.மு.க. தொண்டர்களை நம்பாமல் போஸ்டர்கள் ஒட்டுவது முதல் பி.ஆர்.ஓ. வேலை வரை அனைத்துக்கும் வெளி மாவட்ட ஆட்களையே, ஆர்.எம்.வீ. பயன் படுத்துவதால், இத்தொகுதி தொண்டர்கள் விலகி நிற்கின்றனர்.

நெல்லைத் தொகுதியிலுள்ள 25,000 க்கும் மேற்பட்ட முஸ்லிம்களில் பெரும்பான்மை யோர், பேட்டையில் வாழ்கின்றனர். அவர் களுடைய ஆதரவைப் பெற, வீரப்பன் ஒரு வெள்ளிக் கிழமையன்று தொப்பி வைத்துக் கொண்டு, பேட்டை பள்ளிக்குச் சென்றிருக் கிறார்.

நெல்லைத் தொகுதியைச் சுற்றிய பொழுது, ஆர். எம். வீ. மீது மக்களுக்குக் குறைகள் உள்ளதைக் காண முடிந்தது. திருச்செந்தூர் வைரவேல் திருட்டு, சுப்பிர மணியப் பிள்ளை சாவு விவகாரம் முதல், சமீபத்திய கோயில் கொள்ளைகள் வரை — மக்களுக்குப் பல விஷயங்களில் வெறுப்பு ஏற்பட்டிருக்கிறது.

ஆனால், ஆர். எம். வீ. சந்திக்கும் முதல் தேர்தல் இது. ஆகவே, இது அவருக்கு மானப்பிரச்னை! எப்படியாவது வெற்றி பெற்றே தீர வேண்டும் என்பது அவருடைய வெறி! அதற்கு என்ன வேண்டுமானாலும் அவர் செய்ய ரெடி!

இந்தத் தேர்தலின் வெற்றி தோல் வியைப் பொறுத்துத்தான் வீரப்பனின் எதிர்காலம் அமையும். ஜெயித்தால் ஒருவேளை அடுத்த முதல்வராகக் கூட வரலாம்! தோற்றால், அவருடைய அரசியல் வாழ்க்கை அஸ்தமித்து விடும்! ஆகவே, வீரப்பன் கடுமையாக முயற்சி செய்கிறார். அவர் வெற்றி பெற்றாலும் முந்திய தேர்த லில் அ. தி. மு. க. பெற்ற அளவு அதிக வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற முடியாது என்று மக்கள் கருதுகிறார்கள்.

1977 இல் மக்களுக்குத் தி. மு. க. வின் மீது இருந்த வெறுப்பைப் போன்று 1986 இல் அ. தி. மு. க. வின் மீது உள்ளதாகத் தோன்று கிறது. நெல்லைத் தொகுதியில், ஜனதா வுக்கு டெபாசிட் கூடக் கிடைக்காது என்கி றார்கள்!

அருப்புக் கோட்டை நகரத்திற்கும் அருப்புக் கோட்டை இடைத் தேர்தலுக்கும் சம்பந்தமில்லை! அருப்புக் கோட்டை நகரம்,

சாத்தூர் தொகுதியைச் சேர்ந்தது. அந்தத் தொகுதியைச் சேர்ந்த கூட்டுறவு அமைச்சர் கே. கே. எஸ். எஸ். ஆர். ராமச்சந்திரன், அருப்புக் கோட்டைத் தொகுதிக்குப் பொறுப்பு ஏற்றிருக்கிறார்.

அருப்புக் கோட்டைத் தொகுதியில், நரிக்குடி, காரியாபட்டி, திரிச்சுழி — ஆகிய மூன்று பஞ்சாயத்து யூனியன்கள் மட்டுமே அடங்கும். இதில் கடந்த தேர்தலில், நரிக்குடியில் தி. மு. க. வும், காரியா பட்டியில் காங்கிரஸும், திரிச்சுழியில் அ. தி. மு. க. வும் வெற்றி பெற்றன.

இந்த மூன்று பஞ்சாயத்துப் பகுதிகளும் முழுக்க முழுக்க கிராமங்களை உள்ளடக்கியவை. படிப்பறிவு மக்களிடம் மிகமிகக் குறைவு. ஒரு கிராமத்துக்கும் மற்றொரு கிராமத்துக்கும் இடையே சுமார் 25, 30 கி. மீ. தொலைவு உள்ளது. சரியான பொட்டல் வெளிக்காடுகள். அனேக குக்கிராமங்களில் உலகத்தில் தினசரி என்ன நடக்கிறது என்றே தெரியவில்லை. அவர்களுக்குப் பத்திரிகைகளோ, வானொலியோ எதுவுமே சென்று சேர்வதில்லை. இந்தத் தேர்தலையொட்டி, பத்தாண்டுகளுக்கு முன்பு போடப்பட்ட சாலைகளைப் புதுப்பித்து, நிறைய பஸ்களும் விடப்பட்டுள்ளன.

ஆனால் வழித்தடங்களே இல்லாத உட்பகுதியில் கூடச் சில கிராமங்கள் உள்ளன. அவற்றுக்குக் கட்டை வண்டியில்தான் செல்ல முடியும்! இந்தத் தொகுதியில் பிரசாரம் செய்ய வேட்பாளர்கள், கேரளாவிலிருந்து 'ஜீப்' களைத் தினசரி வாடகைக்கு அமர்த்தியிருக்கிறார்கள். அவற்றால்தான் கட்டை வண்டி செல்லும் கரடு முரடான பாதைகளைக் கடக்க முடியும்!

முதலில், நாங்கள் காரியாபட்டிக்குச் சென்றோம்! அங்கு தேர்தல் பணியாற்றிக் கொண்டிருந்த நகர தி. மு. க. செயலாளர், அய்யுப் கான், என்பவர், "இந்தத் தொகுதியில் தேர்தலையொட்டிப் புதிதாக பதினைந்து பஸ்கள் விட்டிருக்கிறார்கள். நிறைய அடி பம்புகள், ஆழ் கிணறுகள் போட்டிருக்கிறார்கள். இவையெல்லாம் இப்பொழுதும் நடந்து கொண்டிருக்கின்றன. இன்னும், எஸ். எஸ். எல். சி. வரை படித்தவர்களுக்கு வேலை தருகிறோம், கடன் உதவி செய்கிறோம் என்று ஆசை வார்த்தைகளைச் சொல்லி மக்களை மயக்குகிறார்கள். எதிர்க்கட்சியினரைப் போலீஸாரை வைத்து மிரட்டுகிறார்கள். யாராவது அரசு வேலையிலிருந்தால், அவரிடம், 'உன் வேலை போய்விடும், உன் சொந்தக்காரங்க தேர்தல் பணியில் ஈடுபட வேண்டாம்' என்று பயமுறுத்துகிறார்கள்" என்று கூறி வருத்தப்பட்டார்.

அப்பொழுது, 'மிசா' சாமிக்கண்ணு என்பவர், "ஸார்... நான் அ. தி. மு. க. வேட்பாளர் பஞ்சவர்ணத்தின் சொந்த ஊரான உலக்குடியைச் சேர்ந்தவன். நான், இங்கே தி. மு. க. வுக்கு வேலை பண்ணுறதைப் பார்த்து, என்னை மிரட்டுகிறார்கள். பொய் வழக்குப் போட்டு உள்ளே தள்ளிடுவோம்னு பயங்காட்டுகிறார்கள். நான், ஏற்கெனவே 'மிசா' வில் சிறை சென்றவன். இவர்களுடைய பயமுறுத்தலுக்கு எல்லாம் பயப்படாமல், துணிந்து செயல்படுகிறேன்!" என்றார்.



• அவசர அவசரமாக தண்ணீர்க் குழாய் இணைப்பு

**அ**ங்கிருந்து, நரிக்குடிக்கு வந்தோம். வழியில், புதிதாக ரோடு போட்டுக் கொண்டிருக்கிறார்கள். மின் இணைப்பிற்காகத் தூண்கள் நடப்பட்டுள்ளன. நரிக்குடியில், அவசர அவசரமாக, தண்ணீர்க் குழாய் இணைப்பு வேலை நடந்து கொண்டிருக்கிறது.

அங்குள்ள மக்களிடம் விசாரித்த போது, இருபது வருடங்களாக அந்த ஊரில் நடக்காத அரசுப் பணிகள் கடந்த இருபது நாட்களில் மிக விரைவாக நடப்பதை எடுத்துச் சொன்னார்கள். இதே தொகுதியில் தி. மு. க. வேட்



• இங்கு ரோடு போட ஜல்லிகள் குவிக்கப்பட்டுள்ளன.

பாளர் மூன்றாவது முறையாகப் போட்டியிடுவதால், மக்களுக்கு அவர் மேல் ஓர் அனுதாபம் உள்ளது என்றார்கள். இன்னும், பஞ்சவர்ணத்திற்கு அவருடைய ஊரிலேயே எதிர்ப்பு உள்ளதென்றும், அவருடைய வெற்றி சந்தேகத்துக்குரியது என்றும் சொன்னார்கள்.

அழகாபுரி என்ற சிறு கிராமத்தில் தி. மு. க. வேட்பாளர் தங்கபாண்டியனைச் சந்தித்தோம்.

"இந்தத் தேர்தலில், அதிகமாக அப்பாவி மக்களைப் பயமுறுத்துகிறார்கள். அ. தி. மு. க. வுக்கு வோட்டுப் போடாவிட்டால், அழித்து விடுவோம் என்றும் மிரட்டுகிறார்கள். அதனால் மக்கள் அமைதியாக இருக்கிறார்கள். தேர்தல் நேரத்தில், தங்களுடைய ஒட்டு மொத்தமான ஆதரவையும் எனக்குத் தருவார்கள் என்று நம்புகிறேன்'' என்றார்.

"நீங்கள் முன்பு தலைமையாசிரியராகவும், மேல்சபை உறுப்பினராகவும் இருந்திருக்கிறீர்கள். சென்ற ஆண்டு நடந்த ஆசிரியர் போராட்டத்தைத் தலைமையேற்று நடத்தி... வெற்றி பெற்றுள்ளீர்கள். அதனால், ஆசிரியர்களுடைய ஆதரவு உங்களுக்குக் கிடைக்குமல்லவா?'' என்று கேட்டதும்,

''நிச்சயமாக. ஆனால், இந்தத் தேர்தல் பிரசாரத்தில் நேரடியாக அவர்கள் இறங்கவில்லை. காரணம், பயமுறுத்தல்கள் தான். வாக்குப் பதிவு நாளில், அவர்களுடைய ஆதரவை எனக்குத் தருவார்கள் என்பதில் சந்தேகமில்லை!'' என்றார்.

இதே தொகுதியில் தங்கபாண்டியன் கடந்த தேர்தலில் போட்டியிட்டு, வெறும் 3,000 வாக்குகள் வித்தியாசத்தில் வெற்றி வாய்ப்பை இழந்தவர்.

தங்கபாண்டியனுடன் பேசிக் கொண்டிருக்கும் போதே அவருக்கு ஆதரவாகப் பிரசாரம் செய்யப் பேராசிரியர் அன்பழகன் அங்கு வர, அவருடன் நாங்களும் புறப்பட்டோம்.

நாலூர் என்ற கிராமத்தில், பேராசிரியர் அன்பழகன் பேசும் போது, ''1977 இல் எம். ஜி. ஆர். இதே தொகுதியில் போட்டியிட்டு வென்ற போது, தனது நேரடிப் பிரதிநிதியாக பஞ்சவர்ணத்தை நியமித்தார். ஆனால், அதிகாரத்தைப் பயன்படுத்தி, பஞ்சவர்ணம் பல ஊழல்களைச் செய்தது. முதல்வரின் கவனத்திற்கு வந்ததும், 'பஞ்சவர்ணம் எனது பிரதிநிதி இல்லை!' என்று பகிரங்கமாகத்தனது அண்ணா பத்திரிகையில் அறிவித்தார். போக்கிடமில்லாத பஞ்சவர்ணம், தி. மு. க. வில் தஞ்சம் புகுந்தார். பிறகு, மீண்டும் அ. தி. மு. க. விற்குத் தாவினார். அப்படிப்பட்ட ஒருவரைத்தான் இன்றைக்கு இதே தொகுதியில் எம். ஜி. ஆர். நிறுத்தியிருக்கிறார்!'' என்று குறிப்பிட்டார்.

அத்தொகுதி முழுக்கச் சுற்றிய பிறகும் எங்களால், அ. தி. மு. க. வேட்பாளர் பஞ்சவர்ணத்தைச் சந்திக்கவே முடியவில்லை! அவரை அருப்புக்கோட்டையில் பார்க்கலாம் என்றார்கள். மீண்டும், அருப்புக்கோட்டைக்கு வந்தோம். அங்கும் பார்க்க முடியவில்லை.

நெல்லைத் தொகுதியில் நாங்கள் கண்டிராத அளவுக்குப் போலீசை அருப்புக்கோட்டைத் தொகுதியில் காண முடிந்தது. எல்லாம் ஆயுதப் போலீசார். 'முழுக்க முழுக்கக்கிராமங்கள் அடங்கியஒரு தொகுதியில் இவ்வளவு போலீஸா!' என்று ஆச்சரியப்பட்டோம்.

இரண்டு தொகுதிகளிலும் ஆளுங்கட்சியின் பண பலமும், படை பலமும், அதிகார பலமும் செயல்படுவதை நேரில் கண்டறிந்தோம்.

தேர்தலுக்கு முந்திய இரண்டு நாளில், நிலைமை எப்படி வேண்டுமானாலும் மாறலாம். இரண்டு தொகுதிகளிலும் பிரசாரம் செய்ய எம். ஜி. ஆர். வரப் போவதாக அறிவித்திருக்கிறார்கள்.

— நமது நிருபர்

படங்கள்: ஆர். முரளி




# கல்கி

1986 ஆகஸ்டு 31
மலர் 45 இதழ் 5
அக்ஷய ஆவணி 15




## அ. தி. மு. க. வென்றாலும் தோல்வியே!

நெல்லை, அருப்புக் கோட்டைத் தேர்தல்களில் யார் வெல்வார்கள் என்று ஜோஸியம் கூற நாம் தயாராக இல்லை. ஆனால் ஒன்று மட்டும் உறுதியாகக் கூற முடியும். அது, வோட்டு எண்ணிக்கையின் அடிப்படையில் அ. தி. மு. க. அத்தொகுதிகளில் வெற்றி பெற்றாலும் தார்மீக நோக்கில் அவர்களுக்குப் படுதோல்வி என்பதுதான். அந்தப் பெருந் தோல்வியை அ. தி. மு. க. ஏற்கெனவே அடைந்துவிட்டது என்று சொல்லுவது கூடப் பொருத்தமாகவே இருக்கும்.

இடைத் தேர்தல் என்பது மக்கள் பிரதிநிதி ஒருவரின் மரணம் போன்ற ஒரு துயரமான காரணத்தின் விளைவாக வரக்கூடும். ஆனாலும் அதே நேரத்தில் ஆட்சியில் உள்ளவர்களின் செயல் திறனை எடைபோட மக்களுக்கு அளிக்கப்பட்ட ஓர் அரிய வாய்ப்பாகவும் அது அமைகிறது. ஆட்சியிலுள்ளவர்களை மக்கள் தட்டிக் கொடுத்து 'பலே' சொல்லலாம்; அல்லது தலையில் குட்டு வைத்து, 'ஒழுங்காக நடந்து கொள். இல்லாவிட்டால் பொதுத் தேர்தலில் பதவி பறிபோய் விடும்' என்று எச்சரிக்கவும் செய்யலாம். தட்டிக் கொடுப்பார்களா, குட்டு வைப்பார்களா என்பது ஆட்சியில் உள்ளோரின் செயல்திறன் அல்லது மெத்தனப் போக்கைப் பொறுத்த விஷயம். பொதுத் தேர்தலின் போதுதான் ஆட்சி மாற்றம் செய்ய முடியும் என்றாலும் இடைத் தேர்தல், மக்கள் தங்களுடைய திருப்தி அல்லது அதிருப்தியை வெளியிட வாய்ப்பளிக்கிறது; மக்களின் மனநிலையைக் கணிக்கவும் அதன் மூலம் ஆட்சியிலுள்ளவர்கள் தங்களைத் திருத்திக் கொள்ளவும் வழிவகுக்கிறது.

ஆனால் இதெல்லாம் ஒரு லட்சிய இடைத்தேர்தலுக்குத்தான் பொருந்தும். இன்று நடக்கிற தேர்தல் ஜனநாயகப் பண்புகளுக்கு உட்பட்டதாக இல்லை. மாறாக ஒரு காட்டுமிராண்டித் தனமான தேர்தலாக விளங்குகிறது. அதிகார பலமும் பணபலமும் கோர தாண்டவமாடுகின்றன. அதிகார துஷ்பிரயோகம் கணக்கு வழக்கின்றி நடக்கிறது. திடீர் சாலைகள், திடீர் மின் இணைப்புக்கள், திடீர் குடிநீர்த் திட்டங்கள், திடீர் வேஷ்டி புடைவைகள் அன்பளிப்பு, திடீர் சீருடை விநியோகம் என்று ஆட்சியிலுள்ளவர்களின் திடீர் கருணை செயல்படுகிறது. அரசாங்க ஜீப்களில் அரசாங்க அதிகாரிகள் உலா வந்து இவற்றை மேற்பார்வையிடுகின்றனர். மக்கள் தெரிவிக்கும் குறைகள் உடனுக்குடன் தீர்த்து வைக்கப்படுகின்றன. இவற்றுக்கெல்லாம் வரிப் பணம் தண்ணீராகச் செலவிடப்படுகிறது.

பொதுத் தேர்தலிலாவது பண பலமும் அதிகார பலமும் பரவலாகப் பிரயோகமாகும். இடைத் தேர்தலிலோ ஓரிரு தொகுதிகளில் அத்தனையையும் மையப்படுத்த முடிகிறது. தேர்தல் கமிஷன் வகுத்துத் தந்துள்ள விதி முறைகள் முற்றிலும் புறக்கணிக்கப்படுகின்றன. ஒரே வரியில் சொல்வதானால்: மக்களுக்கு மூளைச் சலவை நடக்கிறது! இதை எப்படித் தேர்தல் என்று ஒப்புக் கொள்ள முடியும்? இத்தனைக்கு அப்புறமும் சுதந்திர சிந்தனையுடன் இருக்கும் வாக்காளர்களும் எதிர்க்கட்சிக்கு உழைக்க முன்வரும் தொண்டர்களும் மிரட்டப்படுகிறார்கள். காவல்துறை கண்டு கொள்ளாமல் கைகட்டி நிற்கிறது. எனவே இது தேர்தலே அல்ல; அச்சுறுத்தி மக்களைப் பணிய வைக்க நடக்கும் ஒரு முயற்சி அல்லது, மக்களை விலைக்கு வாங்க நடக்கும் ஒரு வியாபாரம் என்றுதான் சொல்ல வேண்டும்.

இதுநாள் வரை தூங்கிக் கொண்டிருந்து விட்டு இப்போது இடைத் தேர்தலுக்கு முன்பு தொகுதி மக்களிடம் திடீர் கருணை காட்டி அபிவிருத்தித் திட்டங்களை மளமளவென்று நிறைவேற்றுவதென்பது வாக்காளருக்கு லஞ்சம் கொடுப்பதே ஆகும் என்பதைப் புரிந்து கொண்டு இந்தச் சூழ்ச்சியை முறியடிக்கும் விதமாக மக்கள் நடந்து கொண்டால் அது வாக்காளரிடையே ஏற்பட்டுள்ள ஜனநாயக விழிப்புணர்ச்சியை உணர்த்தும். அப்படி நேராமல் போனால் படிப்பறிவில்லாத பாமரரான வாக்காளரை மன்னிக்கலாம்; ஆனால் அவர்களை ஏமாற்றி வோட்டுக்களைப் பறிக்கும் ஆளும் கட்சிக்கு மன்னிப்பே கிடையாது!

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



கல்கி: காவல் துறையை எப்படித் தேர்ந்தெடுத்தீர்கள்? இதில் நுழைய உங்களைத் தூண்டியது எது?

திலகவதி: சிறு வயதிலேயே, ஐ.பி.எஸ். ஆகவேண்டும் என்று கனவு கண்டு, அதற்காக நான் என்னை வளர்த்துக் கொள்ளவில்லை. தர்மபுரியில் பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்தபோது என் ஆசிரியைகள் என்னை மிகவும் ஊக்குவித்ததில் வெறும் பட்டப்படிப்போடு நிறுத்திக் கொள்ளக் கூடாது என்ற உறுதி மட்டும் என் மனத்தில் இருந்தது. அப்போது ஹோசூரில் அன்னு ஜார்ஜ் என்ற பெண்மணி சப்—கலெக்டராக இருந்தார். நான் அவரைப் போல் பிரகாசிக்க வேண்டும் என்று என் தந்தைக்கு ஆசை. எம்.ஏ. பொருளாதாரம் படித்துவிட்டு ஐ.ஏ.எஸ். தேர்வு எழுதினேன். ஐ.பி.எஸ்ஸுக்குத் தேர்வு செய்யப்பட்டேன். நான் விரும்பியிருந்தால் மீண்டும் ஐ.ஏ.எஸ். எழுதியிருக்கலாம். ஆனால் ஐ.பி.எஸ்ஸில் சேர்வது என்று முடிவு செய்துவிட்டேன்.

கல்கி: அதனால் தமிழ்நாட்டின் முதல் பெண் ஐ.பி.எஸ். அதிகாரி என்ற பெருமை உங்களுக்குக் கிடைத்தது இல்லையா?

திலகவதி: இதில் பெருமை பட்டுக் கொள்ள என்ன இருக்கிறது? எவ்வளவோ பேர் ஐ.பி.எஸ். அதிகாரிகள் ஆகிறார்கள். அதில் நானும் ஒருத்தி. நான் பெண் என்பது ஒரு யதேச்சையான விஷயம். அவ்வளவுதான். மேலும் போலீஸ் துறையில் பெண்கள் ஏற்கெனவே இருந்தனர். நான் சேவா சதன் ஹாஸ்டலில் தங்கிப் படித்தபோது என்னுடன் சில பெண் போலீஸார் தங்கியிருந்தனர். ஐ. பி. எஸ். மட்டத்தில் பெண்கள் தமிழ்நாட்டில் இல்லாவிட்டாலும் வடக்கே கிரன் பேடி இருந்தார்.

கல்கி: கிரன் பேடியை ஓர் ஆதர்சப் பெண்ணாகக் கொண்டீர்களா?

திலகவதி: இல்லை. இப்பணியைத் தேர்ந்தெடுத்தது என் சுய சிந்தனையின் அடிப்படையில்தான்.

கல்கி: ஆபத்து நிறைந்த இத்தொழிலை ஒரு பெண்ணாகிய நீங்கள் மேற்கொள்வது குறித்து உங்கள் குடும்பத்தார் எதிர்ப்புத் தெரிவிக்கவில்லையா?

திலகவதி: இல்லை. எந்தத் தொழிலில் தான் ஆபத்து இல்லை? மருத்துவத் தொழிலில் நுழைந்தால் பல பேர் உயிருக்குப் பொறுப்பாக வேண்டியுள்ளதே.... மேலும், காவல் துறையில் ஆண்களுக்கு மட்டும் ஆபத்து இல்லையா? ஆண்டாண்டு காலமாய் இதில் ஈடுபட்டுத்தானே வருகிறார்கள். ஐ.பி.எஸ். நேர்முகத் தேர்விலும் என்னை இதையேதான் கேட்டார்கள். 'இதில் இறங்க எப்படித் துணிந்தீர்கள்?' என்று. 'யாரேனும் ஒருவர் இப்பணியைச் செய்ய வேண்டும். அந்த ஒருவராக நான் ஏன் இருக்கக் கூடாது' என்று பதில் சொன்னேன்.

கல்கி: இவ்வளவு தன்னம்பிக்கையோடு இந்தத் துறைக்குள் நுழைந்தீர்களே, உங்களுக்கு எவ்வளவு தூரம் அங்கீகாரம் கிடைத்

# "அரசியல்வாதிகளின் தலையீட்டையும் அஞ்சாமல் சந்திப்பேன்!"

## —திலகவதி குமரன்-ஐ.பி.எஸ். பேட்டி

தது? நீங்கள் முழுமையாக ஏற்றுக் கொள்ளப்பட்டீர்களா?

திலகவதி: பொது மக்களும் சரி, எனது சகாக்களும் சரி, வெகு சுலபத்தில் என்னை ஏற்றுக் கொண்டுவிட்டார்கள். எனது முதல் போஸ்டிங் வேலூரில் — ஏ.எஸ்.பி. யாக அங்கு போய்ச் சேர்ந்தபோது என்னை ஒரு வி.ஐ.பி. போல் நடத்தினார்கள். நான் ஏற்கெனவே சொன்னது போல் நான் பெண் என்பது ஒரு தற்செயலான விஷயம். அதற்கு அனாவசிய முக்கியத்துவம், தரப்பட்டதாக எனக்குத் தோன்றியது. ரொம்பச் சங்கடமாக இருந்தது.

அதே சமயத்தில் புருவங்கள் உயரவும் செய்தன; ஒரு வேடிக்கைப் பொருளாக என்னைப் பார்க்கவும் ஒரு கூட்டம் இருந்தது. இவர்களையெல்லாம் என் செயல் திறனால் மட்டுமே நிமிர்ந்து உட்கார‌ச் செய்ய முடியும் என்பதை உணர்ந்தேன். என் கடமைக்ளை அஞ்சாமல் செய்து வந்தேன். வேலூரில் நான் இருந்தபோது இரண்டு தேர்தல்கள் நடந்தன. உணர்ச்சி மேலிட்டு, கட்சிப் பூசல்கள் நடக்கும் என்று தோன்றினால் அந்த இடத்துக்கு முன்கூட்டியே போய் விடுவேன். ஜீப் வந்து நின்றதுமே சலசலப்பு அடங்கிவிடும். ஒரு கோயில் சிலை நிர்மாணித்தல் தொடர்பாக கலவரத்தின் அறிகுறிகள் தோன்றி உணர்ச்சிகள் கொந்தளித்துக் கொண்டிருந்தபோது அமைதிக் குழு கூட்டங்கள் போடுவோம். அப்போது மக்கள் பிரதிநிதிகளை நேரில் சந்தித்துப் பேசும் வாய்ப்புக்கள் அமையும். அத்தகைய சமயங்களில் நியாயத்தை எடுத்துச் சொன்னால் அதை அவர்கள் ஏற்றுக் கொள்வார்கள். பெரிய கலவரங்களாக உருவாகக் கூடிய பிரச்னைகளை இப்படி முளையிலேயே கிள்ள முடிந்தது. இதையே மக்கள் என்னை ஏற்றுக் கொண்டதற்கு அடையாளமெனக் கொண்டேன்.

கல்கி: இப்போது நீங்கள் வகிக்கும் சிவில் சப்ளைஸ் துறை எஸ்.பி. பதவிக்கு எப்படி வந்து சேர்ந்தீர்கள்?

திலகவதி: வேலூரில் இரண்டரை ஆண்டுகள் டி.எஸ்.பி. யாகவும் பிறகு அங்குள்ள போலீஸ் பயிற்சி மையத்தில் பிரின்சிபாலாகவும் இருந்தேன். அப்போது சுமார் எழுநூறு பெண்கள் பயிற்சிக்கு வந்திருந்தனர். பிறகு ஏ.ஐ.ஜி.யாகப் பதவி உயர்வு பெற்று திருச்சிக்கு மாற்றல் செய்யப்பட்டேன். அங்கிருந்தபோது பேறுகால விடுப்பில் சென்றேன். மீண்டும் வேலையில் சேரும் போது கைக்குழந்தை இருப்பது கருதி சென்னையில் சிவில் சப்ளைஸ் துறையில் எஸ்.பி.யாகப் போட்டார்கள்.

கல்கி: காவல் துறையில் உயர் பதவி வகிப்பதால் உங்கள் குடும்ப வாழ்க்கை பாதிக்கப்பட்டுள்ளதா?

திலகவதி: தன் அலுவலகப் பணியை 'சீரியஸாக' எடுத்துக் கொள்ளும் எந்தப் பெண்ணின் சொந்த வாழ்க்கையும் எந்த அளவுக்குப் பாதிக்கப்படுகிறதோ அதே அளவுக்குத்தான் என் சொந்த வாழ்க்கையும் பாதிக்கப்படுகிறது. காவல் துறையில் இருப்பதால் அதிகமாக பாதிக்கப்பட்டுள்ளது என்று சொல்ல முடியாது. என் கணவர் (நாஞ்சில் குமரன் ஐ.பி.எஸ்.) சேலத்தில் இருக்கிறார். எப்போதேனும் ஒருமுறைதான் சேர்ந்து இருக்க வாய்ப்புக் கிடைக்கிறது.

கல்கி: அரசுப் பணியில் உள்ள கணவன் மனைவியரை ஒரே இடத்தில்தான் 'போஸ்ட்' செய்ய வேண்டும் என்று விதி இருக்கிறதே?

திலகவதி: இருக்கிறது. அதற்காக ஒரே ஊரில் இரண்டு எஸ். பி.க்கள் இருக்க முடியுமா? நாமும் இதைப் புரிந்து கொண்டு சற்று அனுசரித்துத்தான் போக வேண்டும்.

கல்கி: சிவில் சப்ளைஸ் துறையில் விசேஷ



* திலகவதி குமரன் ஐ.பி.எஸ்., சென்னை சிவில் சப்ளைஸ் துறையில் எஸ்.பி. ஆக இருந்து வருகிறார்.

* பேட்டியின்போது மிகுந்த ஜாக்கிரதை உணர்வுடன் ஒவ்வொரு வார்த்தையையும் யோசித்து, அளந்து, நிதானமாகப் பேசினார்.

* திலகவதி மூன்று குழந்தைகளின் தாய்; நாஞ்சில் குமரன் ஐ.பி.எஸ்ஸின் மனைவி.

* தமிழில் புதுக் கவிதைகள் பல எழுதியிருக்கிறார். அவர் கவிதையின் கையெழுத்துப் பிரதி ஒன்றில் வைரமுத்து 'அற்புதம்' என்று பாராட்டித் தமது கருத்தை எழுதிக் கொடுத்துள்ளார்.

* கவிதைகள் பெரும்பாலும் பெண்ணுரிமை பற்றியவை. திலகவதியின் பேச்சில் இருக்கும் தயக்கம் அவர் கவிதைகளில் இல்லை.

மாக என்ன செய்திருக்கிறீர்கள் அல்லது செய்ய திட்டமிட்டிருக்கிறீர்கள்?

திலகவதி: சென்ற ஆண்டு வெள்ளம் வந்தபோது மண்ணெண்ணெய் விலை ஏறாமல் கட்டுப்படுத்துவதில் வெற்றி கண்டோம். செயற்கைப் பற்றாக்குறைகள் ஏற்படாதவாறு முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் எடுத்து வருகிறோம். 'Storming operations' எனப்படும் திடீர்ச் சோதனைகள் நடத்துகிறோம். ஒரு வட்டாரத்தில் உள்ள எல்லாக் கடைகளிலும் ஒரே சமயத்தில் சோதனை நடத்தப்பட்டு பதுக்கல் சரக்கு வெளிக் கொணரப்படும்.

கல்கி: ரேஷன் கடைகளில் நிறுவையிலும் தரத்திலும் ஏகப்பட்ட ஏமாற்று நடக்கிறதே? இதற்கு ஏதேனும் செய்யக் கூடாதா?

திலகவதி: இது மாநகராட்சியின் 'விஜிலன்ஸ் செல்'லினுடைய அதிகாரத்துக்கு உட்பட்ட விஷயம்.

கல்கி: விவசாயிகளிடமிருந்து கொள்முதல் செய்யப்படும்போது நிறுவையில் ஏகப்பட்ட கோல்மால் நடக்கிறதே, அதைத் தவிர்க்க நீங்கள் நடவடிக்கை எடுக்கவில்லையா?

திலகவதி: அது ரெவன்யூ டிபார்ட்மெண்டின் பொறுப்புசிவில் சப்ளைஸைப் பொறுத்த வரை காவல் துறையின் பங்கு 'நெகடிவ்' பங்குதான்.

கல்கி: இப்படி பொறுப்புக்கள் பிரிந்து போவதால் ஓர் இலாகாவின் செயல்பாட்டுத் திறன் குறைந்துவிடுகிறதே?

திலகவதி: இல்லை. மாறாக, திறன் அதிகரிக்கிறது. அவரவருக்கு வகுக்கப்பட்ட எல்லைகளுக்குள் சிறப்பாகச் செயலாற்ற முடிகிறது. மேலும், சம்பந்தப்பட்டத் துறையினர் ஜாய்ண்ட் மீட்டிங்குகள் நடத்தி, சேர்ந்து இயங்குவதும் உண்டு. இத்தகைய ஜாய்ண்ட் மீட்டிங்குகளில்தான் கொள்கைகள் வகுக்கப்படுகின்றன, exchange of intelligence (துப்புக்கள் பரிமாற்றம்) நடைபெறுகிறது.

கல்கி: காவல் துறையின் சில பிரத்யேகமான பிரிவுகளில் மட்டுமே பெண்களுக்கு அதிக இடம் ஒதுக்கப்படுகின்றதே — இந்தப் பாகுபாடு தேவைதானா?

திலகவதி: இது உண்மையல்ல. நானே முதலில் சட்டம் ஒழுங்குப் பிரிவில் பணியாற்றியவள்தான். திருச்சியில் ரௌடித் தனத்துக்குப் பெயர் போன சில பகுதிகளைக் கண்காணித்திருக்கிறேன். கட்டுப்படுத்தியுமிருக்கிறேன். பெண் என்பதால் போலீஸாருக்குச் சலுகை தரப்படுவதில்லை.

கல்கி: கீழ் மட்டங்களில் கூடவா? SITA சட்ட மீறல்களைக் கட்டுப்படுத்தத்தானே பெண் போலீஸார் பெரும்பாலும் அனுப்பப்படுகின்றனர்?

திலகவதி: ஒரு பெண் விசாரணைக்குள்ளாகும்போது மற்றொரு பெண் அருகே இருக்க வேண்டும் என்று சட்டமே சொல்கிறது. அதனால்தான் இந்த ஏற்பாடு. மேலும், சோதனைகள் நடத்தும்போது ஒரு பெண்ணை மற்றொரு பெண் சோதனை செய்வதுதான் முறையான நாகரீகமான செயல்.

கல்கி: அப்படியானால், சில காலத்துக்கு முன் ஒரு மஸாஜ் பார்லரில் கைது செய்யப்பட்ட சாந்தி என்ற பெண்மணி சென்னை அபிராமபுரம் காவல் நிலையத்தில் மொட்டை அடிக்கப்பட்டு அவமானப்படுத்தப்பட்டாரே, அந்தச் சமயத்தில் பெண் போலீஸ் அருகே இருந்தும் அதை அனுமதித்தார்களா?

திலகவதி: அந்த விசாரணையின்போது பெண் போலீஸ் உடன் இருந்தாரா என்பது எனக்குத் தெரியாது. எப்படியிருந்தாலும் அச்செயல் அத்து மீறிய அதிகாரத் துஷ்பிரயோகம்தான்.

கல்கி: பெண்கள் பொதுவாக அதிக நாணயமானவர்கள். தப்பு செய்யத் தயங்குபவர்கள் என்று கருதப்படுவதுண்டு. ஆகையால் போலீஸ் துறையில் உள்ள ஊழல்கள் குறைய வேண்டுமானால் பெண்களை அதிக அளவில் இத்துறையில் புகுத்துவது உதவும் என்று நினைக்கிறீர்களா?

திலகவதி: உங்கள் கேள்வியை இரண்டாகப் பிரித்துக் கொள்கிறேன்.

போலீஸ் துறை ஊழல் நிரம்பியது என்று நீங்கள் சொல்வதை ஏற்க முடியாது. ஆங்காங்கே ஊழல்கள் இருக்கலாம். அதை எந்த வகையிலும் நியாயப்படுத்த முடியாது. 'ஊழல் இன்று வாழ்க்கை முறையாகவே மாறிவிட்டது. காவல் துறையிலும் அது இருப்பது அதிசயமில்லை' என்று சொல்வதையெல்லாம் நான் ஏற்கத் தயாராயில்லை. அதுவும் சட்டம் ஒழுங்கைப் பராமரிக்க வேண்டிய ஒரு துறையே அவற்றை மீறுவது வருத்தத்துக்குரிய விஷயம்தான். ஆனால், காவல் துறையில் ஊழல் என்பது இன்று பொது விதியாகிவிட்டது என்ற ரீதியில் பேசுவதையும் ஏற்க முடியாது. பத்திரிகைகள் சினிமா போன்ற பொது ஜனத் தொடர்பு சாதனங்கள் எல்லாமே காவல் துறையை மட்டம் தட்டி, கேலிக் கூத்தாக்கிச் சித்திரித்து வருவதே இத்தகைய அபிப்ராயம் உருவாகக் காரணம். இது குறித்து நான் ஒரு மனோதத்துவ நிபுணரிடம் கூடப் பேசினேன். நிஜ வாழ்க்கையில் எதிர்க்க முடியாதவர்களை இப்படிக் கற்பனையில் கேலிக்குள்ளாக்குவதில் மனிதனுக்கு ஓர் அலாதி (வக்கிர) திருப்தி கிடைப்பதால்தான் காவல் துறையும் மாமனார்களும் இப்படிச் சித்திரிக்கப்படுகிறார்கள் என்றார் அவர்.

உங்கள் கேள்வியின் அடுத்த பகுதிக்கு வருவோம். காவல் துறையில் அதிகமாகப் பெண்கள் நியமிக்கப்பட வேண்டியது மிகவும் அவசியம். காரணம்—இன்று பொது வாழ்வில் பெண்கள் அதிகம் ஈடுபட்டுள்ளார்கள். பெண்களுக்கு எதிராக அதிகம் அநீதிகள் இழைக்கப்பட்டு வருகின்றன. கற்பழிப்புக் குற்றங்களில் பாதிக்கப்பட்ட பெண்கள் பெண் போலீஸைச் சுலபமாக அணுக முடிகிறது. இதனால் கற்பழிப்புக் குற்றங்கள் அவமானம் கருதி மறைக்கப்படாமல் வெளிச்சத்துக்கு வருகின்றன.

காவல் துறையின் மேம்பாட்டுக்குப் பெண்களால் மட்டுமே உதவ முடியும் என்று சொல்லாவிட்டாலும், பெண்களால் நிறையவே உதவ முடியும் என்று உறுதியாகச் சொல்வேன்.

*கல்கி: காவல் துறையில் அரசியல் தலையீடு குறித்து உங்கள் அபிப்ராயம் என்ன?*

*திலகவதி:* ஏன் எல்லோரும் அதே பல்லவியைப் பாடுகிறார்கள்? 'அரசியல் தலையீடு' என்கிற வார்த்தைப் பிரயோகத்தையே நான் எதிர்க்கிறேன்; வெறுக்கிறேன்.

*கல்கி: அதற்காக இன்றைக்குக் காவல் துறையில் அரசியல் தலையீடு இல்லை என்பதை மறுக்கவோ மறைக்கவோ முடியுமா?*

*திலகவதி:* பெண் என்ற காரணத்தினாலோ என்னவோ, இதுவரை நான் அதைச் சந்தித்ததில்லை.

*கல்கி: இனிமேல் சந்தித்தால்.....?*

*திலகவதி:* நிச்சயமாகப் பயப்படமாட்டேன். அரசியல்வாதிகளும் நாம் நியாயத்தை எடுத்துச் சொன்னால் கேட்டுக் கொள்வார்கள் என்பதுதான் என் அனுபவம். வேலூரில் இருந்தபோது ஒரு கோயில் விழா தொடர்பாக நடக்க இருந்த ஊர்வலத்தை நிறுத்த வேண்டும் என்று ஒரு பகுதி மக்கள் சார்பில் ஓர் அரசியல்வாதி என்னை அணுகினார். நான் அது சரியல்ல, மக்களின் உணர்ச்சிகளைத் தூண்டும் வகையில் எதையும் செய்யக் கூடாது என்று எடுத்துச் சொன்னபோது ஒப்புக் கொண்டார்.

*கல்கி: உங்கள் பணியின்போது ஏற்பட்ட மிகச் சுவையான அனுபவம் ஒன்றைச் சொல்லுங்களேன்.....?*

*திலகவதி:* திருச்சியில் வரதட்சணைத் தகராறு காரணமாக ஒரு பெண்ணை அவள் கணவனும் மாமியாரும் விஷம் கொடுத்துக் கொன்றதாக அப்பெண்ணின் பிறந்த வீட்டார் வழக்குப் பதிவு செய்தனர். எவ்வளவோ குடும்பங்களில் சகஜமாகக் காணப்படும் மாமியார் — மருமகள் தகராறு அந்தக் குடும்பத்திலும் இருந்ததால் அவள் கொலை செய்யப்பட்டாள் என்றே எண்ணத் தோன்றியது. ஆனால் காவல் துறையில் உள்ளவர்களுக்கு ஆரம்பப் பாடமே எந்த வழக்கையும் திறந்த மனத்துடன் அணுக வேண்டும் என்பது தான். இந்த வழக்கை அப்படி அணுகி ஆராய்ந்தபோது எனக்கு ஒரே ஆச்சரியம், அதிர்ச்சி! இறந்து போன பெண் தன் கணவனிடம் பிறந்தகம் போக வேண்டும் என்று சொல்லியிருக்கிறாள். சென்ற முறை பிறந்தகம் போனபோது அவள் அண்ணன் அவளைத் துன்புறுத்தி அவள் நகைகளைப் பறித்துக் கொண்டதை நினைவூட்டி அவளைப் போக வேண்டாம் என்று தடுத்திருக்கிறான் கணவன். உடனே அப்பெண் தன் கணவன் தன் உரிமைகளில் தலையிட்டுவிட்டதாகக் குமுறி, அவனை அவமானப்படுத்திப் பழி வாங்க வேண்டும் என்று சபதம் எடுத்துக் கொண்டு தானே விஷத்தைக் குடித்து இறந்து போயிருக்கிறாள். வழக்கை ஆராய்ந்தபோது இந்த உண்மை தெளிவாகப் புலப்பட்டது. பெண்கள் மேம்பாட்டிலும் பெண் விடுதலையிலும் எனக்கு ஆர்வம் அதிகம். பெண்கள்பால் பச்சாத்தாபம் உண்டு. ஆனால் அந்தச் சம்பவத்துக்குப் பிறகு இப்படிக்கூட ஒரு பெண் இருக்க முடியுமா என்று ஆச்சரியப்பட்டேன். 'இருக்க முடியும்' என்று தெரிந்து கொண்டேன்.

**இந்த பேட்டி அச்சேறிய தினத்தில் திலகவதி டெபுடி கமிஷனராக சென்னைக் காவல் துறை தலைமையகத்திற்கு மாற்றப்பட்டார்.**

மேலட்டை வண்ணப்படம்: **உத்ரா**

புகைப்படங்கள்: **ஏ. எஸ். திவாகர்**

# ஒளி நிறைந்த வாழ்வு

அண்மைக் காலம் வரை இந்த கிராமம் மாலை மயங்கியதும் இருளடைந்துவிடும். அகல்விளக்குகளின் சுடர்களே இருளோடு போராடித் தோற்கும்

ஆனால் இப்பொழுது- எல்ஐஸியின் முதலீட்டினால் இக்கிராமத்தில் மின்னொளி வீசுகிறது. இக்கிராமத்தில் மாத்திரமல்ல. இன்னும் பல்லாயிரக் கணக்கான கிராமங்களிலும் தான்.

1986 மார்ச் 31 வரை எல்ஐஸி சுமார் 1748 கோடி ரூபாய் மாநில மின்வாரியங்களுக்குக் கடனாகவும் வைப்புநிதி பத்திரங்களுக்கு மூலதனமாகவும் அளித்திருக்கிறது. இது எல்ஐஸியின் மொத்த முதலீட்டில் 14.47%

இத்தொகை 4600 மெகாவாட் மின் சக்தி உருவாக உதவியுள்ளது. இதனால் வணிகமும் தொழில் உற்பத்தித் திறனும் வெகுவாகப் பெருகியுள்ளன.

பாலிஸிதாரர்களின் நல்வாழ்வே எல்ஐஸியின் அடிப்படை நோக்கம். எனவே இது போன்ற சமுதாய முன்னேற்றத்திட்டங்களில் முதலீடு செய்கிறோம் இவை உரிய காலத்தில் அதிக போனஸ் அளித்து எல்ஐஸியை நம்பகமான பாதுகாப்பளிக்கும் உறுதி நிறைந்த நிறுவனமாக உருவாக்கியுள்ளன.

| ஆண்டு | 1960 | 1965 | 1970 | 1975 | 1980 | 1985 |
|---|---|---|---|---|---|---|
| எல்ஐஸியின் முதலீடு மின்சார வசதிக்கென (ரூபாய்-கோடியில்) | 3 | 21 | 183 | 484 | 1,045 | 1658 |



**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**
30 ஆண்டுகள் மக்கள் சேவையில்.

daCunha/LIC/193/86 (A) TM

பட்டுக்கோட்டை பிரபாகர்

# என்னைக் காணவில்லை

5

"இருப்பா அசோக். பதற்றப்படாதே. நான் சொல்றதை முழுசாக் கேளு."

அசோக் எழுந்து கொண்டான்.

"போதும் வக்கில் சார், நீங்க சொன்ன சாராம்சம் போதும். உயிலோட விரிவான விளக்கங்களோ, எந்தச் சூழ்நிலையிலே எழுதினார்ங்கிறதோ எனக்குத் தேவை இல்லே. இதை நான் ஓரளவு எதிர்பார்த்தேன். ஒரே ஒரு விஷயம் மட்டும் சொல்லுங்க. மறுபடியும் அந்த உயிலே மாற்றி எழுத அவருக்கு உரிமை இருக்கு இல்லேயா?"

"தாராளமா.

"அவர் மாத்தி எழுதுவார். எழுத வைப்பேன். வா கதிர், வா பிரேமா, போகலாம்."

மூவரும் வெளியே வரச் சாலேயில் தேடினான் அசோக்.

"என்ன பார்க்கறே அசோக்?" என்றான் கதிர்.

"டாக்ஸி."

"எங்கே போறோம்?"

"எங்கப்பாவைச் சந்திக்க."

"வேணாங்க அசோக். இப்போ நீங்க இருக்கிற மனநிலேயிலே அவரைச் சந்திக்காதீங்க. வார்த்தைகள் வளரும். சாயங்காலம் வரவேற்பு வேறே இருக்கு. அவர் பரபரப்பிலே இருப்பார். நாளேக்கு நிதானமாப் போய்ப் பேசுங்க" என்றாள் பிரேமா.

"ஸாரி பிரேமா. இது எனக்கும், எங்கப்பாவுக்கும் நடக்கிற பிரச்னே. இதிலே நான் யார் யோசனேயையும் கேக்கறதா இல்லே. நீ ஹாஸ்டலுக்குப் போய்விடு. நானும் கதிரும் போய்ட்டு வர்றோம்."

கடந்த டாக்ஸியை அழைத்து இருவர் மட்டும் ஏறிக் கொள்ள, ஜன்னல் வழியாய்க் கையசைத்த அசோக், "நான் உனக்கு அப்புறமா போன் செய்யறேன் பிரேமா!" என்றான். டிரைவரிடம், "அசோக் நகர்ப்பா" என்றான்.

"ரொம்ப படபடப்பா இருக்கே அசோக். அவங்க சொன்ன மாதிரி இப்போ நீ அவரைச் சந்திக்கறது..."

"கதிர், உனக்கு இஷ்டமிருந்தால் என் கூட வா. இல்லேன்னு தாராளமா இறங்கிக்க.

''அசோக், நான் அதுக்குச் சொல்லலே.''

''முழுசா நான் இருக்கேன். நேத்து வந்தவனுக்குச் சொத்து முழுக்க எழுதி வைக்கிறது என்னடா நியாயம்? இதை நான் சும்மா விடப் போறதில்லே.''

''தன் பேர்லசொத்துக்களை எழுதிவச்சாத்தான் கல்யாணத்துக்குச் சம்மதிப்பேன்னு மாயா கண்டிஷன் போட்டிருக்கலாம்னு நினைக்கிறேன்.''

''அதேதான். இவருக்கு எங்கே போச்சு புத்தி?''

''சரி. இப்போ என்ன பேசப் போறே?''

''இது நியாயமான்னு கேட்கப் போறேன்.''

''நியாயம்னு எனக்குப் படுதுன்னு சொல்லிட்டா?''

''சொல்ல மாட்டார்.''

பங்களாவின் வாட்ச்மேன் டாக்ஸியின் பின் சீட்டில் அசோக்கைப் பார்த்துவிட்டுக் கேட்டைத் திறந்து விட்டான். கால் வட்டப் பாதையில் ஓடி, போர்ட்டிகோவிற்கு முன்னதாக நின்றது டாக்ஸி. நாய் தன் துள்ளலைத் துவங்கியது. காரைத் துடைத்துக் கொண்டிருந்த டிரைவர் சொன்ன 'வாங்க தம்பி' காற்றில் கற்பூரமானது.

உள்ளே வேகமாக நுழைந்தான்.

''வாங்க சார்'' என்றான் போனைத் துடைத்துக் கொண்டிருந்த கணேசன்.

வசதியான நாற்காலியில் அமர்ந்து கொண்டு, ''அப்பா எங்கே இருக்கார்? கதிர், இப்படி உட்காரு!''

''மாடியில இருக்கார். தூங்கறார்ன்னு நினைக்கிறேன்.''

''எழுப்பு. நான் வந்திருக்கிறதா சொல்லு. முக்கியமா பேசணும்னு சொல்லு.''

கணேசன் கம்பளம் விரித்த படிகளில் ஏறி மறைந்தான். கதிர், ட்ரே மேலிருந்த பத்திரிகையை எடுத்துப் புரட்டினான். கணேசன் இறங்கி வந்து, ''மாடிக்கு வரச் சொன்னார் — உங்களை மட்டும்'' என்றான்.

''இவன் என் ஃப்ரெண்டு. இவனும்தான் வருவான்னு சொல்லு.''

கணேசன் மறுபடி மேலே போய், கீழே வந்து, ''அய்யாவே கீழே வர்றேன்றாங்க. ஏதாச்சும் சாப்பிடக் கொண்டாரட்டுமா சார்?'' என்றான்.

''என் வீட்ல எனக்கே உபசரணையா?''

நாகராஜன் லுங்கியும், மேலிரண்டு பட்டன்கள் கழன்ற சட்டையுமாய்க் கீழே இறங்கி வந்து அவர்களுக்கு எதிரே அமர்ந்து, ''எப்போ வந்தே?'' என்றார்.

''எதுக்கு வந்தேன்னு கேளுங்க,'' என்றான் அசோக்.

''அதான் தெரியுமே.''

''மன்னிக்கணும். நான் உங்க வரவேற்புல விருந்து சாப்பிட வரலே.''

''நானும் எதிர்பார்க்கலே.''

''பின்னே எதுக்கு அழைப்பு வந்திச்சி?''

''அது அழைப்பு இல்லே; அறிவிப்பு!''

''சந்தோஷம். நேரா வர்றேன். உயில் எழுதி இருக்கிறதாக் கேள்விப்பட்டேன்.''

சற்று நேரம் அமைதியாக இருந்துவிட்டு, ''யெஸ்'' என்றார் நாகராஜன்.

''எப்படி எழுதினீங்க?''

''வக்கீலே வச்சிதான். பத்திரத்திலே தான்.''

''விளையாடற நேரமில்லே இது. இந்தச் சொத்துக்கள் பூரா உங்களுக்குப் பிறகு யாரைச் சேரணும்னு எழுதியிருக்கீங்க?''

''என் மனைவியைச் சேரணும்னுதான்.''

''உங்களைக் கைக்குள்ளே போட்டுக்கிட்ட மாயாவுக்குன்னு தெளிவாச் சொல்லுங்க!''

''அசோக்! மாயா உனக்குச் சித்தி! மரியாதை இருக்கட்டும்.''

''அப்பாவே இல்லேங்கறப்போ ஏது சித்தி? யெஸ். அப்படித்தானே உயில்ல அர்த்தமாகுது? சட்டப்படி இந்தச் சொத்துக்களிலே எனக்கு உரிமை உண்டு.''

''நான் சுயமா சம்பாரிச்ச சொத்துக்களை என் இஷ்டப்படி யாருக்கு வேணும்னாலும் எழுதி வைக்க எனக்கு உரிமை உண்டு அசோக்.''

''இது அநியாயம்!''

''எனக்கு நியாயமாத்தான் படுது. உயிலோட காப்பி தர்றேன். படிச்சிப் பார்க்கிறியா? எனக்குப் பிறகுதான் இந்தச் சொத்துக்கள் மாயாவுக்குப் போகும். அதுவரைக்கும் உனக்கு அனுபவ உரிமை உண்டுன்னு குறிப்பிட்டிருக்கேன். உன்னை நீ நிலைப்படுத்திக்க நான் கொடுத்திருக்கிற சந்தர்ப்பம் இது. நம்ம பங்களாக்களிலே எங்கே வேணும்னாலும் நீ இருக்கலாம். சாப்பிடலாம். எல்லாத்தையும் பயன்படுத்திக்கலாம்.''

''உங்க கடைசி நாள் வரைக்கும்!''

''யெஸ். நான் வாழ்ந்த வரைக்கும் பெத்த கடமைக்காகச் சொகுசு மாறாமல் என் மகனை வச்சிருந்தேன்ங்கிற திருப்திக்காக. இப்ப இருக்கிற என் ஹெல்த் கண்டிஷனுக்கு அட்லீஸ்ட் இன்னும் பத்து வருஷங்களுக்கு என்னை எமன் நெருங்க மாட்டான். எவ்வளவு காலம் பார்! அதுக்குள்ளே நீ உனக்குன்னு ஒரு வாழ்க்கையை, வருமானத்தை அமைச்சுக்கிறதிலே எனக்கு ஆட்சேபணை இல்லே. வியாபாரம் பண்றியா? முதலீடு வேணுமா? கடன் தர்றேன்.''

''வார்த்தைகளாலே என்னை மயக்கப் பார்க்காதீங்க. நீங்க எனக்குச் செய்யறது துரோகம். பிளெய்னா பேசலாம். வாழ்க்கையைப் பத்தி உங்க கோணம் வேறே. என் கோணம் வேறே. சில கொள்கைகளோட வாழணும்கிறது என் எண்ணம். அந்த அந்த நிமிஷம் சரின்னு படறதைப் பின்விளைவைப் பார்க்காம அனுபவிச்சிடணும், அதுக்காகச் சில தவறுகளைச் செய்யலாம்ங்கிறது உங்க எண்ணம். ஐ ஹேட் யு. யு ஹேட் மி. நமக்குள்ளே ஒரு அண்டர்ஸ்டாண்டிங் இனி வரப் போறதில்லே. சச்சரவு இல்லாமல் விலகிடலாம். உயிலே நீங்க மாத்தி எழுதியாகணும்.''

''எப்படி சார்?'' என்றார் நக்கலாக.

''சொத்துக்களிலே சரி பாதி எனக்குப் போதும். மீதியை உங்க இஷ்டப்படி எவருக்கு வேண்டுமானாலும் கொடுங்க.''

"அசோக், மைண்ட் யுவர் வர்ட்ஸ். அவ, இவன்னு பேசினே..."

"பேசுவேன்... நல்லா பேசுவேன். மாயா எப்படிப் பட்டவள்னு எனக்குத் தெரியும். அவளோட பழைய சரித்திரம் எனக்குத் தெரியும். அவ எப்படி எப்படி சாகஸம் பண்ணி உங்களை வளைச்சுப் போட்டிருக்கான்னு தெரியும். அவளோட நோக்கம் என்னன்னு தெரியும்."

"யு... யு... சன் ஆஃப் எ பிட்ச்! எந்திரிடா. வெளில போடா. இன்னும் ஒரு வார்த்தை



மாயாவைப் பத்திப் பேசினே...''

''என்ன செய்வீங்க?'' என்று எழுந்து நின்றான் விறைப்பாக. ''இப்ப என்னைத் திட்டறதா நினைச்சி சொன்னீங்களே, வார்த்தை! அது யாரை? எங்க அம்மாவை. அதாவது உங்க முதல் மனைவியை. அதாவது இறந்து போன மனைவியை. அதாவது விபத்திலே இறந்து போன மனைவியை. அதாவது...''

அசோக் ஆவேசமாகப் பேசிக் கொண்டே போக, அவன் கன்னத்தில் விழுந்தது நாகராஜனின் புறங்கை வீச்சின் பதிவு. இதற்குள் கணேசனும், டிரைவரும், சமையல்காரனும் வந்து கைகளைப் பிசைந்து கொண்டு பதற்றமாக நிற்க...

அசோக்கின் உதடுகள் அவமானத்தில் துடித்தன.

அவன் கரத்தைப் பற்றின கதிர், ''வா அசோக், போய்டலாம். அப்புறம் பேசிக்கலாம்'' என்று இழுத்தான்.

''விடுடா என்னை. நானும் பொறுமையா எத்தனை நாள்தான் இருக்கிறது? எந்த யோக்யனாவது பொண்டாட்டி செத்து ஒரு வருஷம் முடியறதுக்குள்ளே இன்னொரு கல்யாணம் செய்வானுடா? எங்கம்மா எப்படிடா இறந்தாங்க? விபத்து இல்லே! அது விபத்து இல்லே!'' என்று கத்தினான்.

''கணேசன், போலீசுக்கு போன் பண்ணுடா'' என்றார் நாகராஜன்.

''எவனுக்கு வேணும்னாலும் பண்ணுங்க. உறுதியா ஒண்ணு சொல்றேன். நான் கேட்டபடி பாதி சொத்து எனக்கு வந்தாகணும். யோசனை பண்ணி முடிவுக்கு வாங்க. நாளைக்கு நான் மறுபடி வருவேன். முடிவைச் சொல்லுங்க. முடிவு எனக்குச் சாதகமா இல்லேன்னா, அப்பான்னு கூடப் பார்க்கமாட்டேன் — நான் எதுக்கும் துணிஞ்சிடுவேன். வாடா கதிர்!''

கதிரை இழுத்துக் கொண்டு வேகமாக வெளியேறினான் அசோக்.

**ஹோ**ட்டலின் வாசலில் கார், கார், கார், கார், கார், நின்று கொண்டிருந்தன.

மலர்கள் தெளிக்கப்பட்ட சோபாவில் ஆழமான பிரௌனில் சூட், கோட்டில் நாகராஜன்... ஜிவு ஜிவுவென்று சந்தோஷம் வைத்திருந்தார். அருகில் ஜரிகை இல்லாத இடத்தைத் தேட வேண்டிய பட்டுச் சேலையில் நிரந்தரமாகப் புன்சிரித்துக் கொண்டு பார்சல்களை வாங்கி, வாங்கி அருகே கணேசனிடம் தந்து கொண்டு மாயா. அந்தப் பக்கம் மியூஸிக் ஆர்க்கெஸ்ட்ரா.

மற்றொரு புறம் பஃப்பே மேஜையில் அனைத்து வகைகளும் குடலை உறுத்தக் காத்திருக்க... வந்திருப்பவர்களில் யாரை பிக்பாக்கெட் அடித்தாலும் ஆயிரத்துக்கும் குறையாமல் தேறும். இசைக்குழுவின் இந்திப் பாடலுக்கு ஒரு ராஜஸ்தான் பெண், பாடகனுக்குப் பறக்கும் முத்தம் அனுப்பிக் கொண்டிருந்தாள், பல்லவி வரும்போதெல்லாம்.

தாமஸ் தனது நாற்காலியில் நிமிர்ந்து அமர்ந்து கொண்டான். வந்து பதினைந்து நிமிடமாயிற்று. இன்னும் மாயா கவனிக்கவில்லை. தாமஸ் எழுந்து மேஜைக்குச் சென்று பீங்கான் கிண்ணத்தில் பாஸந்தியும், ஸ்பூனும் எடுத்துக் கொண்டு மேடைக் கருகில் மெதுவாக நடந்தான்.

புடைவையின் ப்ளீட்சைச் சரி செய்யக் குனிந்த மாயா அவனைப் பார்த்து விட்டு மெலிதாகத் தலையசைத்தாள். தாமஸ் சென்று தனது நாற்காலியில் அமரும் வரை அவனைப் பார்வையால் தொடர்ந்தாள்.

நாகராஜன் மில் பிரச்னை, மகன் பிரச்னை, சூசை பிரச்னை என்று சகலமும் மறந்து உற்சாகமாய்க் கைகுலுக்கிக் கொண்டிருந்தார். மாயாவுக்கு ஒவ்வொரு விருந்தினரையும் அறிமுகப்படுத்திக் கொண்டிருந்தார்.

தாமஸ் எழுந்தான்.

அவன் எழுவதை மாயா கவனித்தாள்.

மேஜைகளைக் கடந்து சீரியல் செட் சுமந்த ஒரு சவுக்கு மரத்தின் பக்கமாக நின்று கொண்டான். மேடையிலிருந்து கிட்டத்தட்ட அறுபதடி தூரம்.

தாமஸ் நடைபாதை தாண்டி அந்தப் பக்கம் நிறுத்தி வைத்த தன் மோட்டார் பைக் சுலபமாக வெளியே எடுக்கும் வண்ணம் இருக்கிறதா என்று ஒரு தரம் பார்த்துக் கொண்டான்.

உடனடியாகச் சாலையில் சீறும் தோதில் தொந்தரவில்லாமல் நின்று கொண்டிருந்தது பைக். ஜெர்க்கினின் கீழிரண்டு பட்டன்களைக் கழற்றி, உள்ளே கை நுழைத்து அந்தக் குரோமிய எமனைக் கையில் எடுத்தான்.

இவன் நின்ற அந்தச் சற்று ஒதுங்கின, நிழலான பகுதிப்பக்கம் எவர் கவனமும் திரும்பாத வகையில் மேடையில், ''கண்ணே, கட்டிக்கவா? கட்டிக்கிட்டு ஒட்டிக்கவா?'' என்ற பாடகனின் சிணுங்கலில் லயித்திருக்க...

தாமஸ் தனது கர்சிப்பை எடுத்துக் கழுத்தை, முகத்தைத் துடைத்துக் கொள்ள... இங்கே மாயா தயாரானாள் — தனது கணவனைத் தள்ளிவிட...

அந்த கெஸ்ட் நாகராஜனின் கையை இறுக்கமாகப் பிடித்துக் கொண்டு, ''வாவ், யுவர் செலக்ஷன் ஈஸ் டாப் கிளாஸ்'' என்று விட்டு... ரிப்பன் கட்டிய, பூக்கள் நிறைந்த பார்சலைத் தந்துவிட்டு நகர்ந்ததும்...

தாமஸ் நாகராஜனை நோக்கி... ஆனால்... அவருக்கு ஒரு அடி தள்ளி பின்னணியில் இருந்தபூவாலான இதயத்தைக் குறி வைத்து, குதிரையை அழுத்த...

மாயா சற்று அதிகப்படியான பதற்றம் காட்டி, ஒரு விதமாய் நாகராஜன் மேல் பாய்ந்து, அவரைக் கீழே தள்ளிய வேகத்தில் தானே தாமஸின் குறிக் கோட்டிற்கு இடையில் வந்து விட...

அந்தச் சூடான தோட்டா சுழன்று கொண்டே பயணம் செய்து மாயாவின் இடது புஜத்தின் சதையை ஜாக்கெட்டோடு சேர்த்துப் பிய்த்தெடுத்துக் கொண்டது.

(தொடரும்)

# 21 விதமான பலன்கள் பெற

21 விதமான பத்ரங்களைக் கொண்டு பிள்ளையார் சதுர்த்தி அன்று பூஜை செய்ய வேண்டும்.

பத்ரங்கள்: 1. முல்லை இலை; 2. கரிசிலாங்கண்ணி இலை; 3. வில்வம்; 4. வெள்ளருகம்புல் வேரோடு கூடியது; 5. இலந்தை இலை; 6. ஊமத்தை இலை; 7. துளஸி; 8. வன்னி இலை; 9. நாயுருவி இலை; 10. கண்டங்கத்திரி இலை; 11. அரளி இலை; 12. எருக்கிலை; 13. மருதை இலை; 14. விஷ்ணுக்கிராந்த இலை; 15. மாதுள இலை; 16. தேவதாரு இலை; 17. மருவு; 18. அரச இலை; 19. ஜாதி மல்லிகை இலை; 20. தாழை இலை; 21. அகத்திக் கீரை இலை.

பலன்கள்: 1. தர்மம்; 2. பொருள்; 3. இன்பம்; 4. ஸௌபாக்யம்; 5. கல்வி; 6. பெருந்தன்மை; 7. நலவாழ்வுடன் கூடிய மோக்ஷம்; 8. முகத்தில் பால் வடியும் தன்மை; 9. வீரலக்ஷ்மி கடாக்ஷம்; 10. விஜயலக்ஷ்மி கடாக்ஷம்; 11. எல்லோரும் தன்னிடம் அன்பாயிருக்கும் தன்மை; 12. குடும்பத்தில் கர்ப்பாரக்ஷை; 13. மக்கட்பேறு; 14. நுண்ணறிவு; 15. நற்புகழ்; 16. சோகத்தினால் வாடாத்தன்மை; 17. அசுபங்களை அகற்றல்; 18. தன் வாக்கிற்கு எதிர் வாக்கு அடங்கிப் போதல்; 19. கோபம் கொண்டவர்களைச் சாந்தப்படுத்தும் தன்மை; 20. பிறர் ஏவும் ஆபிசாரம் அடங்குதல்; 21. துயர் தீர்தல்.

பூரண பலன் பெற<br>
எங்களது இனிப்பு மற்றும் கார வகைகளை வாங்கி<br>
நல்லோர்களுக்கு விநியோகம் செய்யவும்.

திருமண வைபவங்களுக்கு: சீர்முறுக்கு, பருப்பு தேங்காய், அதிரசம், திரட்டுப்பால், காப்பரிசி, வறுபயறு ஆகியவற்றைத் தயாரித்துத் தருகிறோம்.

இனிப்பு வகைகள்: அதிரஸம், குங்குமப்பூ பாதாம் அல்வா, பாதாம் கதலி, பாம்பே காஜா, தேங்காய் போளி, தேங்காய் கோவா, குங்குமப்பூ கோதுமை அல்வா, குங்குமப்பூ ஜாங்கிரி, ரஸமலாய், மங்களூர் போளி, ரஸகுல்லா, சோன்பப்டி, இனிப்பு சோமாஸ்.

கார வகைகள்: பாம்பே அவல் மிக்ஸர், கான்பிளாக்ஸ் மிக்ஸர், கைமுறுக்கு, ரயில் கட்டிடம், நவரத்ன மிக்ஸர், மிளகு வடை, சீடை, சீப்பு சீடை, தட்டை, தேன்குழல், வறுபயறு, முள்ளுத் தேன்குழல், வெஜிடபிள் சமோசா.

பொடி வகைகள்: கருவேப்பிலை பொடி, ரசப் பொடி, இட்லி மிளகாய்ப் பொடி, சாம்பார் பொடி, பருப்பு பொடி, ஊறுகாய் பொடி.

## தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

No. 24, 2வது மெயின் ரோடு, காந்திநகர்<br>
அடையாறு சென்னை - 600 020

போன்: 412557



# எப்படி இது சாத்தியம்?

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி 1986 நான்காவது பரிசு பெறும் கதை — 1

சுமதியின் கைவிரல்கள் தன்னிச்சையாக டைப்ரைட்டரில் இயங்கிக் கொண்டிருந்தாலும், மனம் என்னவோ காலையில் கணவன் சொன்னதையே நினைத்துக் கொண்டிருந்தது.

யாரிடம் போய் பணம் கேட்பது?

**விஜி**

ஏற்கெனவே பணம் கேட்டு அனுபவம் இருந்திருந்தால், இதுபோல் தயக்கமும் கூச்சமும் இருந்திருக்காதோ என்னவோ என நினைத்தாள்.

"சுமதி, சரசுவுக்கு பிறந்த வீடுன்னு சொல்லிக்கறதுக்கும், உடன்பிறப்புன்னு சொல்லிக்கறதுக்கும் என்னைத் தவிர யார் இருக்கா? ஏதோ கேட்காதவ கேட்டுட்டா; நானும் சரின்னுட்டேன்" என சரசு ஆயிரம் ரூபாய் கேட்டதைச் சுமதியிடம் சொன்னவன், அதே மூச்சில் "உனக்கு இஷ்டமில்லையா?" என்றும் கேட்டுவிட்டான்.

சுமதி நினைத்திருந்தால் இந்தக் கேள்விக்குப் பதிலாகத் தான் எப்படிப்பட்டவள் என்று ஆயிரம் உதாரணங்களுடன் விளக்கியிருக்க முடியும். அவள் பேசாமல் இருந்ததற்குக் காரணம், தன்னைப் பற்றித் தானே வெளிச்சம் போட்டுக் காட்ட விரும்பாதது தான். 'ஒருவரைப் புரிந்து கொள்ள ஒரு வருடம் போதாதோ?' என்ற எண்ணமும் அவள் மனத்துள் எழுந்தது.

"என்ன சுமதி பேசாம இருக்க? உனக்கு இஷ்டமில்லேன்னா வேண்டாம்; நான் சரசுட்ட சொல்லிடறேன்."

மறுபடியும் அவன் தனது மனத்தை ரணப்படுத்துவதை உணர்ந்தாள். தான் என்ன செய்யலாம், என யோசிப்பதை இப்படிப் புரிந்து கொள்கிறாரே என்ற வருத்தத்தை ஒருவித செயற்கைச் சிரிப்பால் லேசாக்க முனைந்தாள்.

'மாசக் கடைசி — கையில் தம்படி இல்லை; இருக்கிறநகையெல்லாம்ப்ளாட்வாங்குவதற்காக வெளியேறிவிட்டது. என்ன செய்யலாம்?' என யோசித்துக் கொண்டிருக்கும் போது,

"நான் என்னோட ஆபீஸ்லேயும் கேட்டுட்டேன் சுமதி. எல்லாரும் கையை விரிச்சுட்டாங்க" என்றான் பாஸ்கர்.

"நீங்க கவலைப்படாதீங்க. நாளைக்கு நான் என்னோட ஆபீஸ்ல கேட்டுப் பார்க்கறேன்."

"நிச்சயம் கிடைக்குமா?"

சுமதி சிரித்தவாறே, "இதுவரை கடன்னு ஆபீஸ்ல யார்கிட்டேயும் கேட்டதில்லே; அதனால் கிடைக்கும்னு நம்பறேன். எப்படியோ சரசுக்கு நாம பணம் கொடுக்கறோம். போதுமா?"

பாஸ்கர் "தேங்க்ஸ் சுமதி! தேங்க்ஸ் சுமதி!" என்றவாறு அவளது கையை இறுக்கமாகப் பிடித்தான்.

**டெ**ஸ்பாச் க்ளார்க் சுந்தரத்திடம் பேசிக் கொண்டிருந்தாள் சுமதி.

"ஆயிரம் ரூபாயா? இன்னிக்கேவா? அப்படி என்னங்க சுமதி அவசரம்?"

சுமதி நாத்தனார் வந்திருப்பதைக் கூறி, கூடவே விஷயத்தையும் சொன்னாள்.

சுந்தரம் தலையைச் சொறிந்தார். கண்ணாடியைத் துடைத்துக் கொண்டார். பின் சொல்ல நினைத்ததைச் சொன்னார்:

"சொன்னா தப்பா எடுத்துக்கமாட்டீங்களே. நீங்க ஹஸ்பெண்ட், ஒய்ப் ரெண்டு பேரும் சம்பாதிக்கறீங்க. சேமிக்காமலா இருந்தீங்க?"

அவரது இந்த வார்த்தை சுமதியை அவமானப்பட வைத்தது. கடன் கேட்கப் போனால் இந்த மாதிரி தேவையற்ற விசாரணையையெல்லாம் சந்தித்துதான் ஆக வேண்டுமா?

வலிய ஒரு சிரிப்பை வரவழைத்துக் கொண்டாள்.

"ஒரு ப்ளாட் வாங்கியிருக்கோம் சார், அதான் கொஞ்சம் இழுபறி...."

"அப்படியா... இன்னொண்ணும் சொல்றேன், சொந்த 'சிஸ்டரா' நினைச்சுத்தான்... நாத்தனார், ஓர்படியாள் அப்படி இப்படீன்னு பணத்தைக் கொடுத்துட்டுப் பின்னாடி கஷ்டப்படாதீங்கோ; நாளைக்கு நமக்கு ஒண்ணுன்னா யாரும் தாங்கமாட்டா. நம்ப கைதான் நமக்கு உதவி!"

சுமதி மனத்திற்குள் சிரித்துக் கொண்டாள். முக்கால்வாசிக் குடும்பங்களில் புயலடிக்க இதுபோன்ற 'கலசந்தி'காரர்களது. வக்கிரப் பேச்சுதான் காரணமோ?

பாவம்! சொல்லிவிட்டுப் போகட்டும். நான் ஏதாவது மறுத்துச் சொன்னால், 'பின்னால் நான் சொன்னதை நினைப்பே' என சொல்வதுடன் பணம் கிடைக்காமல் போய் விட்டதென்றால்.....

"சுமதி.... அவ்வளவு பெரிய தொகை இப்ப இல்லே. நீங்க பர்சேஸ் பாலுவைக் கேளுங்களேன். எப்பவும் இளைக்காத மணி பர்ஸ் வெச்சிருக்கிற ஒரே ஆள் அவன்தான். கேக்காதவங்க கேட்டுருக்கீங்க; ஹெல்ப் பண்ண முடியலேன்னு வருத்தமாத்தான் இருக்கு."

"பரவாயில்லே சார்" என சொல்லிவிட்டுத் தன்னுடைய இருக்கைக்கு வந்து அமர்ந்தாள்.

"சரசு இன்னிக்குச் சாயங்காலம் ஊருக்கு போறா. தர்றேன்னு வாக்குக் கொடுத்துட்

"அடியே! எங்களுக்கு மறுபடியும் வாரம் ஆறு நாள் வேலைங்கற திட்டத்தைக் கொண்டு வந்துடுவாங்க போல இருக்கு!"

"அது சரி! ஆபீஸில் ஒழுங்கா வேலை செய்யறவங்க கவலைப்பட வேண்டிய விஷயம் அது. நீங்க ஏன் வீணா அலட்டிக்கறீங்க?"



டேன்'' என்ற வார்த்தைகள் மீண்டும் ஞாபகம் வர, மனம் பரிதவிக்க, பர்சேஸ் பாலுவின் 'சீட்டை' நோக்கிப் போனாள்.

கடவுளே! இவராவது பணம் இல்லையென்றால், இல்லை என ஒரே வார்த்தையில் சொல்லிவிட வேண்டும். வீண் வார்த்தைகளைத் தாங்கிப் பழக்கமில்லாத என்னை, வார்த்தைகளால் இம்சிக்கக் கூடாது!

''சார்.''

''ப்ளீஸ் வெயிட், சே! கால்குலேட்டரை எடுத்தா திருப்பிக் கொடுக்கணும்ங்கற ஞாபகமே யாருக்கும் கிடையாது. நாம போய் 'லொங்கணும்'. எல்லாம் என் தலையெழுத்து. என்ன மேடம், சொல்லுங்க....?''

''வந்து.... வந்து.... அர்ஜெண்டா ஆயிரம் ரூபாய் வேணும், இருக்குமா? ரெண்டு மாசத்துல தந்துடறேன்'' எப்படியோ திக்கித் திணறி, கொட்டிவிட்டாள்.

''யாரு? நம்ம ப்யூன் கதிரேசன் சொன்னானா? வாயை வச்சுக்கிட்டு சும்மாவே இருக்க மாட்டானே?'' என முணகிவிட்டுக் கேட்டான். ''என்னங்க மேடம், நீங்க போய்... டபுள் ஏர்னிங் ஆள் நீங்க....'' நிதானமாய்ச் சிரித்தான்.

சுமதி ஒன்றும் பேசாமல் நின்றாள். மனத்தைத் திடப்படுத்திக் கொண்டாள்.

''தப்பா நெனைச்சுக்காதீங்க மேடம். ஒரு வித க்யூரியாசிடியில கேட்டுட்டேன்.''

''பரவாயில்லை சார். ப்ளாட் ஒண்ணு வாங்கினதால.....''

''ஓ.... அப்படியா.... சந்தோஷம். பட் என்னோட பாலிசி என்ன தெரியுமா? கையில வச்சுக்கிட்டுதான் எதையும் செய்வேன். எங்கம்மாவுக்குக்கூட ப்ளாட் வாங்கணும்னு ஆசைதான். கடனோ உடனே வாங்கி ஒரு ப்ளாட்டை வாங்குடான்னுதான் சொல்றா. அப்புறம் அந்தக் கடனை அடைக்க பத்து வருஷம் வயத்தைக் கட்டணும்; வாயைக் கட்டணும். எதுக்கு இந்த அவஸ்தை; நமக்கு ப்ராப்தம்னு ஒண்ணு இருந்தா எல்லாம் தன்னால வரும். என்ன சொல்றீங்க?''

சுமதி மறுபடியும் மௌனமாக இருந்தாள். தான் கடன்பட்டு ப்ளாட் வாங்கியிருப்பது தவறு என்று கூறுகிறான். அவன் சொல்வது சரி என ஆமோதிக்க வேண்டும் என எதிர்பார்க்கிறான்.

''நான் சொல்றது கரெக்டா இல்லையா மேடம்?''

சுமதி வார்த்தையால் ஒன்றும் கூறாமல் லேசாகச் சிரித்தாள்.

''ஆங்.... சரி.... விஷயத்துக்கு வருவோம். நான் பணம் தர்றேன். அதோட என்னோட கண்டிஷனையும் சொல்லிடறேன்'' இப்போது ஏன் சத்தம் போட்டுப் பேசுகிறான்?' சுமதி சுற்றும்முற்றும் பார்த்தாள்.

''நாலு பர்செண்ட் வட்டி.... மூணு மாசத்துக்குள்ள அசலையும் திருப்பித் தந்துடணும்! நோ சாக்குபோக்கு. என்ன?'' மறுபடியும்சத்தமாகத்தான் பேசுகிறான். சுமதிக்கு, லஜ்ஜையாக இருந்தது. பணம் வாங்கும் போது என் காது மந்தமாகி இவன் சொல்



அருள்வாக்கு

ஸந்தோஷமாக இருப்பதாகச் சொல்வது மனஸின் அநுபவங்களை வைத்துத்தான். ஆனால் ஸந்தோஷாநுபம் பெறுகிற இந்த மனஸ்தான் நாமா என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டாமா? எதெதையோ தெரிந்து கொள்வதிலும் எதெதையோ ஆராய்ச்சி பண்ணி உண்மைகளைக் கண்டு பிடிப்பதிலும்தான் மனுஷ்ய ஜீவனின் பெருமையே இருக்கிறது என்று சொல்லிக் கொள்கிறோம். அணுவிலிருந்து galaxy வரையிலும் எல்லாவற்றையும் ஆராய்ந்து அவற்றின் உண்மைகளைத் தினந்தினமும் தெரிந்து கொண்டு கர்வப்படுகிறோம். இப்படித் தெரிந்து கொள்கிற நாம் வாஸ்தவத்தில் யார் என்று ஆராய்ச்சி பண்ணித் தெரிந்துகொள்ள வேண்டாமா? தன்னுடைய ஸத்யமான ஸ்திதியையே தெரிந்து கொள்ளாமல் மற்றவற்றைத் தெரிந்து கொண்டு, ''ஸயன்ஸால் ஸத்யங்களைத் தெரிந்து கொள்கிறோமாக்கும்!'' என்று மார்தட்டிக் கொள்வது பரிஹாஸத்துக்கு இடமானதல்லவா? ஸ்தய ஸத்யமானதைத் தெரிந்து கொள்ள வேண்டும். அறிகின்ற அறிவை அறிய வேண்டும் என்றால் ஆத்ம சாஸ்த்ரத்தை அப்யஸிக்க வேண்டும்.

ஆத்ம-சாஸ்த்ரங்களை இப்போதே தீவிரமாக அப்யஸிப்பதற்கில்லாத பெரும்பாலருங்கூட மெய்யான ஆத்மாவை அடியோடு மறந்து பொய்யான மனஸுக்காகவே ஸதாவும் பாடுபட்டுக் கொண்டிருப்பதாக இருக்கப்படாது. அப்படியிருந்தால் நாம் ஏமாளி என்று ஆகிவிடும். அதனால்தான் எப்படிப் பட்டவராயிருந்தாலும், தினம் ஒரு ஐந்து நிமிஷம் பத்து நிமிஷமாவது, நம்முடைய கார்யம், எண்ணம், லோகம் முதலான ஸகலமும் பொய்யாகப் போய்விடும் ஒரு பெரிய சாந்த பதம் ஆத்மா ஆத்மா என்று இருக்கிறது என்பதாக நினைப்பூட்டிக் கொண்டு, அந்த ஐந்து, பத்து நிமிஷம் சாந்தமாக உட்கார்ந்திருக்க வேண்டும் என்பது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

வதைக் கேட்காமல் போய்விடுவேனோ என்று?

"நல்லா எண்ணிப் பார்த்துக்குங்க." நோட்டுக்களை நீட்டியபடி இதையும் பலமாகத்தான் சொன்னான்.

அப்பாடா! ஹாலில் இருந்தவர்கள் அவனைப் பார்த்துவிட்டார்கள். இப்போது அவனுக்கு சந்தோஷம். ஓ.... அதைத்தான் அவன் முகம் காட்டுகிறதோ!

"ரொம்ப தேங்க்ஸ் சார்" இதை மனப்பூர்வமாகச் சொன்னாள் சுமதி.

பாஸ்கர் சுமதியின் 'வரவிற்காக'க் காத்திருந்தான். சரஸ்வதி மூட்டை முடிச்சுகளுடன், பயணத்திற்குத் தயாராகிக் கொண்டிருந்தாள். காலையில் தங்கையிடம், பணத்தை ஊருக்குப் போகும்போது தருவதாகச் சொல்லியிருந்தான்.

சுமதி பணத்துடன் வருவாளா! இல்லாவிட்டால்.... ஐயையோ சரஸ்வதி என்ன நினைத்துக் கொள்வாள். தவித்துக் கொண்டிருந்தான்.

இதோ! சுமதியே வந்துவிட்டாள்.

கணவனைத் தனியாக அழைத்துப் போய் பணத்தைக் கொடுத்தாள்.

"ரொம்ப ரொம்ப தேங்க்ஸ் சுமதி. எங்க ஆபீஸ்காரங்க மாதிரி உங்க ஆபீஸ்லேயும் கையை விரிச்சுடுவாங்களோன்னு பயந்துட்டே இருந்தேன். நல்லவேளை......"

சுமதி சரஸ்வதியிடம் வந்தாள்.

"சரசு.... ஆவக்காய் ஊறுகாய் தரேன். எடுத்துட்டுப் போ; அங்கேயெல்லாம் உனக்குப் போடக் கைவராது. இந்தா, சருகு இலையை மறந்துட்டே பார்" எனச்சொல்லியவாறு பரபரவென காரியத்தில் ஈடுபட்டாள்.

இரவு......

பாஸ்கர் சுமதியை நெருக்கமாக அணைத்துக் கொண்டே கேட்டான்:

"என்ன சுமதி.... இந்த ஒரு வாரமா ஆபீஸ்லதான் எனக்குத் தூக்கம்! ராத்திரி தூக்கம் வந்தால்தானே..... உனக்கு எப்படி?"

சுமதி சிரித்தவாறு அவனை அணைத்துக் கொண்டாள்.

ஆமாம், எப்படி இவளால் இவ்வளவு இயல்பாக இருக்க முடிகிறது.

அதுவும் சாயங்காலம்.....

பாஸ்கர் சரசுவிடம் பணத்தைக் கொடுக்கும் சமயம் சுமதி அந்தப் பக்கம் வர, சரசு 'டக்'கென பணத்தை மறைத்துக் கொண்டு, "என்னண்ணா இது? மன்னி பார்த்துட்டு, பின்னாடி உன்னை குத்தப் போறா" என சொன்னவுடன், தனது கணவன் என்ன பதில் சொல்லப் போகிறான் என்ற ஆதங்கத்தில் சுவரோரம் நின்றவளுக்கு, "ஏதாவது சொல்லிடுவாளா? பிச்சுப்புட மாட்டேன்! என் தங்கைக்கு நான் செய்யறேன். அவ என்ன சொல்ல...." எனச் சொல்லிவிட்டு இருவரும் சேர்ந்து சிரிக்க, ஒரு பெருமூச்சுடன் அந்த இடத்தைவிட்டு நகர்ந்தாள் சுமதி.

ஆமாம், எப்படி இவனால் இவ்வளவு இயல்பாக.... சிரித்துக் கொண்டு.... ஊம்....



ரீகனுக்கு முகவெட்டு இல்லையா?

அமெரிக்க ஜனாதிபதி ரீகன் நடிகராக இருந்தபோது, ஒரு பிரபல சினிமா கம்பெனி, ஜனாதிபதி வேடத்திற்குப் பொருத்தமானவரைத் தேடிக் கொண்டிருந்தது. ரீகன் ஜனாதிபதி வேடத்தில் நடிப்பதாகச் சொன்னார். ஆனால் ரீகனுக்கு ஜனாதிபதிக்கேற்ற முகவெட்டு இல்லை என்று சொல்லி அவருக்குவாய்ப்புத்தர மறுத்துவிட்டனர்!

— வி. ஆர். ரவிக்குமார்




உலகின் மிகப் பெரிய, மிகச் சிறிய வாக்கியம்!

இரண்டையும் எழுதியவர் விக்டர் ஹியூகோ! (இவரது 'லா மிரா பிளா') (ஏழை படும் பாடு) என்ற நாவலில் இவர் எழுதியுள்ள ஒரே வாக்கியம் 823 வார்த்தைகளைக் கொண்டது! 3 பக்கங்களுக்குத் தொடர்கிறது!

இந்தப் புத்தகம் எப்படி விற்கிறது என்பதை அறிய, தமது புத்தக வெளியீட்டாளருக்கு, ரத்தினச் சுருக்கமாக, "?" என்று கடிதம் எழுதினார். கிடைத்த பதில்: "!"

ஆதாரம்: வீக்லி; சம்பத்குமாரி.

"எழுதப் படிக்கத் தெரிஞ்சிருந்தும் நீங்க எப்பவும் கையெழுத்துப் போடாம கைநாட்டே வைக்கறீங்களே, ஏன்?"

"கைநாட்டுன்னா போர்ஜரிங்கற பிரச்னைக்கே இடமிருக்காது பாருங்க! அதனாலதான்!"



# தவழும் உடல்; தளராத உள்ளம்!

தன் உடல்நிலையைக் கூடப் பொருட்படுத்தாமல், தள்ளாடியபடியே எழுந்து, பள்ளிக்கூடம் செல்வதற்கு ஆர்வத்தோடு காத்திருக்கும் தன் மகனை ஒரு கணம் பார்க்கிறாள், தாய்.

களையான முகம், ஆர்வமிருந்த கண்கள், அப்படியே அம்மாவின் சாயலாய் இருந்தான். ஆனால் இடுப்புக்குக் கீழே மட்டும்... அவன் கால்கள் வளைந்து, சக்தியற்று, சூம்பிப் போய்... பார்க்கப் பார்க்க அந்தத் தாயின் பெற்ற வயிறு பரிதவித்தது. அவள் கண்களில் கண்ணீர்த் துளிகள் திரையிட்டன!

"என்னம்மா.... அப்படி பார்க்கறே....! உனக்குக் காய்ச்சல் தீரல்லியா? உனக்கு உடம்புக்கு முடியாட்டா.... வேண்டாம்மா!" தன் தாயின் உடல்நிலையை உணர்ந்து, அந்த மகன் தன் ஆசையை அழித்துக் கொள்கிறான்.

"எனக்கொண்ணுமில்லேடா.... ராசா! உன்னைப் பள்ளியில கொண்டு விடுறேன்!" என்று சொல்லி, அவசர அவசரமாக அவனுக்குப் பள்ளிச் சீருடையை அணிவிக்கிறாள் அவன் அம்மா.

இரண்டு நாட்கள் விடுப்புக்குப் பிறகு, மீண்டும் பள்ளி செல்லும் ஆர்வத்தில், சிறுவனின் மனம் குதூகலிக்கின்றது.

பதினொரு வயது மகனைத் தூக்கி இடது பக்க இடுப்பில் வைத்துக் கொண்டு, வலது கையில் அவனுடையப் புத்தகச் சுமையைத் தூக்கிக் கொண்டு... மூத்த மகளிடம், "வீட்டைப் பார்த்துக்கோம்மா....!" என்று சொல்லிவிட்டு, பள்ளிக் கூடத்தை நோக்கி விரைவாக நடக்கிறாள் அத்தாய்.

இளம்பிள்ளைவாதத்தினால் பாதிக்கப்பட்ட மகனைத் தன் இடுப்பில் வைத்துக் கொண்டு அத்தாய் பள்ளிக்கு அழைத்துச் செல்லும் காட்சியை, நாகர்கோவிலிலிருந்து ஐந்து கி.மீ. தொலைவிலுள்ள மறவன் குடியிருப்பு என்ற சிற்றூரில் நாம் தினசரி காணலாம்.

ஊனத்தை ஒரு காரணமாகக் கொண்டு வீட்டில் சும்மா உட்கார்ந்திருக்காமல், படிப்பில் ஆர்வம் காட்டும் அம்மாணவனை நேரில் பார்க்க வேண்டும் என்ற எண்ணத்தில், மறவன் குடியிருப்பு புனித மரியன்னைத் தொடக்கப் பள்ளிக்குச் சென்றோம்.

தரையில் முட்டுக்கால் போட்டு ஊர்ந்து வந்து, எங்களருகில் உட்கார்ந்தான் அச்சிறுவன். ஊர்ந்து ஊர்ந்து நகர்ந்ததில் அவன் முட்டுக்கால் பகுதிக் காய்ப்பேறியிருந்தது!

"உன் பெயரென்ன?" என்று கேட்டதும் "வில்ஸ்டன்" என்ற கனீர் குரலில் பதிலளித்தான்.

**"அம்மா....! ரெண்டு நாளா உனக்கு உடம்பு சுகமில்லேன்னு நான் பள்ளிக்குப் போவல்லே....! இன்னிக்காவது என்னைக் கொண்டுவிடும்மா....!" மகன் தன் தாயை அழைக்கிறான்.**

''எந்த வகுப்பில் படிக்கிறாய்?''

''நான்காம் வகுப்பில்.''

''இப்போதுதானா நான்காம் வகுப்பில் படிக்கிறான்?'' என்ற கேள்வி எங்கள் மனத்தில் உதயமானதை உணர்ந்த தலைமையாசிரியை, ''இவன் இப்படியிருப்பதால் வீட்டிலுள்ளவர்கள், எட்டு வயதில்தான் இவனைப் பள்ளியில் சேர்த்தார்கள்!'' என்றார்.

அருகிலிருந்த அவன் வகுப்பு ஆசிரியையும், ''நல்லாப் படிக்கிறான். படிப்பில் நல்ல ஆர்வம் இருக்கிறது!'' என்று சான்றிதழ் அளித்தார்.

''இவனுக்கு ஏதாவது உதவிகள் கிடைக்கின்றதா... மேடம்...?'' என்று நாங்கள் தலைமையாசிரியையிடம் கேட்க, ''எல்லா மாணவர்களுக்கும் கிடைக்கும் இலவசப் புத்தகங்களும், சத்துணவும் தான் இப்போதைக்கு இவனுக்கும் கிடைக்கின்றன. நாகர்கோவிலில் இயங்கி வரும் சேவை மனப்பான்மை கொண்ட, 'அன்பர் குழு' என்ற இயக்கம், தனது நான்காவது ஆண்டு நிறைவு விழாவின் போது, இவனுக்கு இலவசச் சீருடை வழங்கியது. இதெல்லாவற்றையும்விட, இவனுக்கு ஒரு மூன்று சக்கர சைக்கிள் கிடைத்தால்... பள்ளிக்கு வர, போக வசதியாயிருக்கும். இவன் தாய்க்கும் கஷ்டம் குறையும்!'' என்றார்.

அங்கிருந்து, விலிஸ்டனின் வீட்டிற்குச் சென்று, அவனுடைய தாய், ஜெசு தங்கத்தைச் சந்தித்தோம். அவருக்கு எட்டுக் குழந்தைகள். கணவருக்கோ நிரந்தரமான வேலை இல்லை. குடும்பக் கட்டுப்பாடு பற்றி அறிந்திருந்தாலும் ஏற்றிருக்க மாட்டார்கள் போலும்! ''ஒரு ஆண் வாரிசு வேணும் என்று வேண்டாத நாளில்லீங்க'' என்றார். ''ஆறாவதா ஒரு மகன் பொறந்தான். கடவுள் கண்ணைத் தொறந்திட்டாருன்னு நாங்க சந்தோஷப்பட்டோம்...! ஆனா... ரெண்டு வயசிலே அவனுக்கு இளம்பிள்ளை வாதம் (போலியோ) வந்து இப்படி ஆயிட்டுதுங்க! எவ்வளவோ வைத்தியம் பண்ணிப் பார்த்தும் இவன் கால்கள் சரியாகல்லீங்க. ஆறாவதா பொறந்த ஆசை மகன், இப்படி ஆயிட்டானேன்னு கவலைப்படாத நாளில்லீங்க!'' என்றார். சரியான பருவத்தில் விலிஸ்டனுக்கு இளம்பிள்ளை வாதத் தடுப்பு மருந்து கொடுத்திருந்தால்...? உம், அதுபற்றி இப்போது நினைத்து என்ன பயன்?

பிறந்த குழந்தை, ஆறு மாதத்தில் தவழ்ந்தால்... அதன் தாய் அகம் மகிழ்வாள். ஆனால், ஆயுள் முழுக்கத் தவழ்ந்தால்... அத்தாயின் மனம் என்ன வேதனைப் படும் என்பதை விலிஸ்டனின் தாய் மூலம் எங்களால் உணர முடிந்தது.

— பானுமணாளன்

புகைப்படங்கள்: ராஜாதரன்

அவர்: விட்டுவிட்டு வயிற்று வலி வந்தால் அந்த டாக்டர் கிட்டே போனால் நல்ல பலன் கிடைக்கும்....!

இவர்: ரொம்பக் கெட்டிக்காரரா?

அவர்: ஆமாம்! தொடர்ந்து வயிற்று வலி வரும்படி பண்ணிடுவார்.....!

— வி. சாரதி டேச்சு



''டிபன் சாப்பிட்டுவிட்டுப் பில்லுக்குப் பணமில்லாதவங்களை உங்க ஹோட்டல்லே மாவரைக்கச் சொல்லுவீங்களா.... இல்லே பாத்திரம் கழுவச் சொல்லுவீங்களா?''

''இரண்டுமில்லே. எங்க ஹோட்டல்லே டிபன் சாப்பிடறதே ஒரு தண்டனைதானே!''

# தென்னார்காடு மாவட்டத்தில் கல்கி

நமது நிருபர்கள் தற்போது தென்னார்காடு மாவட்டத்தில் சுற்றுப் பயணம் செய்து கல்கி வாசகர்கள் எழுதி அனுப்பிய பிரச்னைகளை ஆராய்ந்து கொண்டிருக்கிறார்கள். கட்டுரைகள் செப்டம்பர் கல்கி இதழ்களில்.



# மாண்புமிகு முதலமைச்சர்

சருக்கம் — 21

## பிரார்த்தனைகள்

அன்றைக்கு மீனராசிக்குரிய ரேவதி நட்சத்திரம்.

சோழப் பேரரசுக்கு உட்பட்ட அனைத்துக் கோயில்களிலும் வழிபாடுகள் அமர்க்களமாக நடைபெறுகின்றன.

குறிப்பாகத் தில்லையில் அந்தணர்ப் பெருமக்கள் அதர்வ வேதத்தில் சொல்லப்பட்டிருக்கும் நோய் தீர்க்கும் மந்திரங்களை ஓதும் வேள்விகளையே நடத்துகிறார்கள். எவரைப் பலி கொண்டாலும் கவலையில்லை; எங்கள் மாண்புமிகு முதலமைச்சர் பிழைத்தால் போதும் என்கிற தியாக உணர்வுடன் யாகம் நடத்துகிறார்கள்.

நாட்டின் சில பகுதிகளில் துஷ்ட தேவதைகளுக்கு ஆடுகளைப் பலியிட்டும் வழிபாடு நடத்துகிறார்கள். தொண்டை மண்டலத்தில் அதுவும் குறிப்பாகக் கோயில் பூமியான காஞ்சி மாநகரில் அனைத்துக் கோயில்களிலும் ராஜாபிஷேகமும் ராஜகர்மாணி யாகங்களும் வேதியர்கள் நிகழ்த்தித் தங்கள் முதலமைச்சர் உடல்நலத்துக்காகப் பிரார்த்தனை செய்கிறார்கள்.

தஞ்சை, திருச்சிராப்பள்ளியைச் சூழ்ந்த இடங்களில் ஓதுவார் பெருமக்கள் தேவாரத் திருமுறைகளை நாவார ஓதிப் பிரார்த்தனை செய்கிறார்கள்.

பாண்டிய நாட்டில் கூட அங்கயற்கண்ணி கோயிலில் இந்தப் பிரார்த்தனைகளும் வேள்விகளையும் நடத்தப் பாண்டிய மன்னன் மாறவர்மன் சீவல்லபன் உத்தரவிடுகிறான்.

சோழன் பகைவனேயானாலும் தமிழ்பொருட்டு ஒரு சைவக் காப்பியம் தரவல்ல சான்றோராகிய சேக்கிழார் பிழைத்து எழுந்து வர வேண்டும் என்கிற விழுமிய விருப்பம் பாண்டிய மன்னன் மாறவர்மன் சீவல்லபனுக்கும், அமைச்சர் பெருமக்களுக்கும் சேனுதிபதி சொல் விளங்கும் கருணைதாசருக்கும் இருந்தது.

தமிழ்நாட்டில் ஆயிரம் கோணங்களில் பத்தாயிரம் பூசல்கள் இருந்தாலும், தமிழ் என்றுவந்துவிட்டால்பூசல்கள் பூசனைகளாய் விடும்! இதுதான் தமிழ் பெற்ற ஒற்றுமையின் தாரக மந்திரம்.

இதுவரை ஒரு முதலமைச்சர் உடல்நலப் பொருட்டு இப்பேர்ப்பட்ட யாகங்களும் வழிபாடுகளும் நடந்ததாகச் சரித்திரமே இல்லை என்று எண்ணிய போது, சேக்கிழார் பலமென்ன என்பது ஒட்டக்கூத்தருக்குப் பூரணமாகப் புரிகிறது.

இத்தனையையும் கண்ட ஜோதி தன்னுள் பெருமை கொண்டாலும், அவள் மட்டும் அந்த ரேவதி நாளில் திருநாகேச்சுரத்துக்குச் சென்றுவிட்டாள். அந்தப் புண்ணிய இடந்தானே அவர்களை முதன் முதலில் சந்திக்க வைத்த பெருமைக்குரியதானது. அவளும் ரேவதிக்குரியவளாயிற்றே!

அன்று விரதமிருந்து வழிபாடு நடத்துகிறாள் ஜோதி.

சேக்கிழாரைக் கவனிக்கும் பொறுப்பு அநபாயன் குலோத்துங்கனுக்கு இருந்தாலும் பவானியிடம் தனியான கவனத்துடன் ஒப்படைத்திருந்தாள்.

அன்று பகல் பொழுதில் திருநாகேஸ்வரரை வழிபட்டு விட்டு நேரே வைத்தீஸ்வரன் கோயிலுக்கு அவசர அவசரமாகப் பயணப்படுகிறாள்.

அவளைக் காக்கத்தான் தனியான பாதுகாப்புப் படையே செல்கிறதே! அரசு ஆணையாயிற்றே!



அப்படி என்ன வைத்தீஸ்வரன் கோயிலில் சிறப்பு இருந்தது?

வைத்தீஸ்வரப் பெருமான் முன் வைத்தீஸ்வர நாட்டியமே நிகழ்த்தி, வைத்தீஸ்வரனை மனமிரங்கச் செய்து, வைத்தியம் பார்க்க அழைக்க இருந்தாள்.

ஆ! எப்பேர்ப்பட்ட சிறந்த பிரார்த்தனை இது?

கேள்விப்பட்ட ஒட்டக்கூத்தர் பெருமான் கூட அவசர அவசரமாக வைத்தீஸ்வரன் கோயில்நாடிப் பயணப்பட்டிருந்தார். ஜோதியின் நாட்டியத்தைப் பார்க்க வேண்டும் என்கிற அவா! அத்துடன்...

சேக்கிழாருக்கு நலயாகத் தமது பங்கு என்ன என்கிற கேள்விக் குறியும் கவிராட்சஸப் பெருமானுக்கு எழாமலில்லை. எனவே தமது பங்கு வைத்தியர்களுக்கெல்லாம் வைத்தியனாகிய வைத்தீஸ்வரனைப் பிரார்த்திப்பது என்கிற சாக்கில் ஜோதியின் திருநடனம் காணப் புறப்பட்டார்.

அன்றைய கருநிறப் போர்வைப் பொழுது...

வைத்தீஸ்வரன் கோயிலூரே தீபங்களால் அலங்கரிக்கப் பெற்று, 'ஹே, வைத்தீஸ்வரா! இங்கே உனது பிரசன்னத்துக்குப் பிரார்த்தனை ஒப்பந்தம் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. அருள் கூர்ந்து காட்சி தந்து ஒப்பந்தத்தின் நிர்ப்பந்தத்தை அறிவாயாக! நிர்ப்பந்தத்தின் நிலைமையையுணர்வாயாக! இது ஒரு நிலையான தமிழின் நிர்ப்பந்தம்! அந்தத் தமிழைக் காத்து நில்! போற்றி நில்! வாழ்த்தி நில்!' என்கிற ஒளிமுழக்கம் செய்கிறது.

கவிச்சக்கரவர்த்தியும் கவிஞர்களின் ராட்சஸரும், வாணிதாசரும், சருவஞ்ஞ கவியும், கௌடப் புலவருமான ஒட்டக்கூத்தர் வேறு அரசு சார்பில் வைத்தீஸ்வரன் கோயிலுக்கே எழுந்தருளியிருக்கும் செய்தி எங்கும் பரவிவிட, மக்கள் திரண்ட வண்ணமிருந்தனர்.

வைத்தீஸ்வரப்பெருமானைப்பேரலங்காரமுடன் அலங்கரித்து வலம் வந்து முடிந்து






பெரியார் மாவட்டம் வெள்ளக்கோவில் என்ற ஊரில் 'ஸ்ரீ வீரக்குமார்' எனும் திரையரங்கு உள்ளது. இதில் படம் ஆரம்பிக்கும் முன் "நீராரும் கடலுடுத்த" என்னும் தமிழ்த்தாய் வாழ்த்தை ஒலிபரப்புகிறார்கள். பிறகு, "முருகனுக்கு சமர்ப்பணம்" எனும் சிலேடு காண்பிக்கப்படுகிறது. அப்புறம், ஏதேனும் ஒரு திருக்குறள் எழுதப்பட்டு அதன் பொருள் விளக்கத்துடன் ஒரு சிலேடு காண்பிக்கப்படுகிறது. அதைத் தொடர்ந்து, ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு பழமொழி எழுதிய சிலேடையும் காண்பிக்கிறார்கள். அதன்பின், மின் விளக்குகள் போடப்படுகிறது. திரையரங்கில் உள்ள ஒவ்வொரு வகுப்பிலும் ஒருவர் வந்து நின்று, "பெரியோர்களே! நண்பர்களே! தயவு செய்து திரையரங்கினுள் புகை பிடிக்காதீர்கள்!" என்று உரக்கக் கூறுகிறார்கள். அதன் பிறகு தான் திரைப்படம் ஆரம்பமாகிறது!

— சரோஜினி கண்ணன்.

---

கோயில் வாயிலில் அமர்த்தி வைத்திருக்கிறார்கள்.

எதிரே நடன அரங்கம்.

ஜோதியும் அரங்கில் ஆயத்தமாகச் சலங்கை கட்டிக் கொண்டு காத்திருக்கிறாள். ஒட்டக்கூத்தர் பெருமான் இன்னும் வருகை தரவில்லை. வந்ததும் தொடங்கி விட வேண்டியதுதான். என்ன இருந்தாலும் அரசரசான்; அவைக் குரவரல்லவா?

ஒட்டக்கூத்தர் பெருமானும் வருகை தந்து விட்டார்.

தமிழின் உலா நாயகனை அவரைக் கண்டதும் மக்கள் தமிழைப் போற்றி வாழ்த்திக் குரலெழுப்புகின்றனர்; அத்துடன் முதலமைச்சர் உடல்நலத்தையும் வாழ்த்திக் குரலெழுப்புகின்றனர்.

ஒட்டக்கூத்தர் வந்தமர்ந்ததும் மத்தளம், சுருதி, சரியாக இருக்கிறதா என்று கவனிக்க, ஏனைய வாத்தியங்களும் தத்தம் சுருதி பரிசுத்தத்தைச் சோதித்துக் கொள்கின்றன.

சுருதி பரிசுத்தம் என்பது உலகின் மூல தத்துவமாயிற்றே!

திரை விலகுகிறது...

திறந்தவெளியாதலால் எங்கு நோக்கினும் தலையங்கள்! சுற்று வட்டாரங்களான சீர்காழி, குடமூக்கு, திருநள்ளாறு, காரைக்கால், தஞ்சை போன்ற ஊர்களிலிருந்தும் மக்கள் திரண்டு வந்திருந்தனர்.

ஜோதி ஜோதிமயமாகக் காட்சி தருகிறாள்.

ஆ! கரவொலிகளா அவை?

அங்கு எழும்பிய கரவொலி ஒரு காலத்துச் சோழர்த் தலைநகரான, தஞ்சையை அடுத்திருந்தபுதிய தலைநகர், கங்கைகொண்ட சோழபுரத்துக்கே கேட்டிருக்க வேண்டும்.

ஒட்டக்கூத்தரே பிரமித்து விட்டார்.

ஜோதி மலரஞ்சலியில் விநாயகனையோ, வாணியையோ, முருகக் கடவுளையோ அழைக்கவில்லை. ஜயங்கொண்டார் எழுதிய கலிங்கத்துப் பரணியின் இராச பாரம்பரியத்தை எடுத்துக் கொண்டாள். சோழர்களை வாழ்த்தத் தொடங்கினாள். அநபாய குலோத்துங்கனுடைய முன்னோடிச் சோழன் முதல், அவனது தந்தை விக்கிரம சோழ மன்னர் வரை அழைத்து,"எங்கள் முதல்வரை வாழ்த்துகவே!" என்று இறைஞ்சி ஆடுகிறாள்.

அடுத்து, "நீங்களெல்லாம் என்னுடன் சேர்ந்து வைத்தீஸ்வரப் பெருமானைப் பிரசன்னமாக வேண்டுகவே!' என்று இறைஞ்சி ஆடுகிறாள்.

இறுதியாக —

வைத்தீஸ்வரனே எழுந்தருளுகிறார்! எழுந்தருளுவதாக ஜோதியின் நாட்டிய நாடகம்!

வைத்தீஸ்வரன் எழுந்தருளி நவக்கிரகங்களை அழைக்கிறார். ஒருவர் முகத்தை ஒருவர் பாராமல் நிற்கும் பகைக் கோலம் கலைந்து நட்புக் கோலம் பூண்டு வந்து வரிசையாக நின்று மாண்புமிகு முதலமைச்சர் சேக்கிழார் பெருமானைப் பாருங்கள் என்று உத்தரவிடுகிறார்.

ஈசனின் கோபத்துக்கு அஞ்சி அவர்களும் ஒப்புக் கொண்டு வரிசையில் நிற்க, "சேக்கிழார் நலத்தை வாழ்த்துங்கள்!" என்று ஈசன் உத்தரவிட, நவக்கிரகங்கள் வாழ்த்துகின்றன!

நவக்கிரகங்கள் வாழ்த்துகிற போது ஏற்பட்ட புல்லரிப்பால், சூழ்ந்திருந்த மக்களும் சேர்ந்து கண்கலங்கி வாழ்த்திய காட்சி, கௌடப் புலவரான ஒட்டக்கூத்தரையும் கலங்கச் செய்துவிட்டது.

ஜோதி, தமிழகத்து நாட்டியக் கருவூலம் என்பதில் இம்மியும் ஐயமில்லை என்றுணர்ந்தார் ஒட்டக்கூத்தர். இந்தக் கீர்த்திரங்களையும்தானேஏற்று கதைநிகழ்த்தி ஆடியிருக்கிறாளே! நாட்டியமும் நிறைந்தது.

அவரவர் கலைந்து சென்று கொண்டிருக்கிறார்கள். எவர் நாவில்தான் ஜோதியின் புகழ் வரிகள் எழுதப்படவில்லை?

---

ஒப்பனையறையுள் ஜோதி தனது ஒப்பனைகளைக் களைந்து கொண்டிருந்தாள். உடனிருந்து உதவியவள் வல்லரசி.

வெளியில் பலத்த காவல். இந்தக் காவலை மீறி ஒரு பருத்த சிவனடியார் உள்ளே நுழைய வேண்டுமென்கிறார்.

"வெளியில் ஏதோ சத்தம் கேட்கிறது. என்னவென்று போய்ப் பார்த்து வா, வல்லரசி!" என்று உத்தரவு பணிக்கிறாள் ஜோதி.

"வழக்கம் போல மக்கள் கூட்டம் உங்களைப் பார்க்க ஆசைப்பட்டு ஏற்படுத்துகிற சத்தமாயிருக்கும்" என்றாள் வல்லரசி.

"இல்லை; இந்தச் சத்தம் எனக்கு அப்படித் தோன்றவில்லை. என்னவென்று கவனித்து

விட்டுத்தான் வாயேன்! வரவர நீ நிரம்பவும் சோம்பேறியாய் விட்டாய்!''

ஜோதி கொஞ்சம் அதிகமாகவே கடிந்து கொண்டாள்.

இப்போது சில நாட்களாகவே ஜோதி தான் மனம் கலங்கி இருக்கிறாளே! எப்போது சேக்கிழார் மரணப் படுக்கையில் படுத்தாரோ அப்போதே அவளும் மரணப் படுக்கையில் படுத்துவிட்டாளே! இருப்பது சேக்கிழாரைப் போன்றே பாதி உயிர்தானே?

இந்த வைத்தீஸ்வரன் கோயிலில் அத்தனை கவலைகளையும் மறந்து எப்படித்தான் ஆடினாளோ?

அவளா ஆடினாள்? ஆடியது அவளது பிரார்த்தனை; ஆடியவன் வைத்தீஸ்வரன்!

வெளியில் யாரோ வந்திருப்பதாகச் செய்தி.

வல்லரசி வெளியே சென்று கவனித்து விட்டு உள்ளே வந்தாள்.

''யாரோ! சிவனடியாராம்! உங்களை அவசியம் பார்க்க வேண்டுமாம்!''

சிவனடியார்? யாரிந்தச் சிவனடியார்?

''எப்படி இருக்கிறார்?''

''பழுத்த சிவஞானம் போல இருக்கிறார்!''

சிவஞானம்... சிவஞானி என்பதை இவள் அம் விகுதியுடன் சிவஞானம் என்கிறாளோ?

''நல்லது; உள்ளே வரச் சொல்! அந்த வைத்தீஸ்வரப் பெருமானே சிவஞான கோலம் பூண்டு வந்திருக்கலாம். அடிகளாருக்குத் தடை விதிப்பது அவமானம்.''

வல்லரசி வெளியே சென்றாள்.

சற்றைக்கெல்லாம் பழுத்த பழமாய் ஒரு சிவஞான யோகி வல்லரசியுடன் வந்து கொண்டிருந்தார்.

''நமச்சிவாயம்! நமச்சிவாயம்! நலமா ஜோதி?''

ஜோதி கூர்ந்து பரிசீலிக்கிறாள்.

நாவில் பஞ்சாட்சரம்; கண்களிலோ போதை வழிகிறது. பேதை உணர்ந்து கொள்கிறாள்.

இவன் எவனோ ஒரு போலி! ஏதோ சூது கருதி நுழைந்திருக்கும் சூத்திரதாரி! சமயத்துக்கேற்பப் புனைவடிவம் தாங்கும் சந்தர்ப்பவாதி!

வல்லரசியைப் பொருள் நிறைந்த அலமரலுடன் நோக்குகிறாள் நாட்டிய வல்லரசி ஜோதி.

''வாருங்கள் அடியாரே! இந்த நேரத்தில் நீங்கள் வந்தது அந்த வைத்தீஸ்வரனே வந்தது போலிருக்கிறது. தாங்கள் யாரோ?''

''சிவஞான முனிவன் என்று சொல்லுவார்கள்!''

''பழரசம் கொண்டு வருகிறேன்!''

''வேண்டாம் நாட்டிய நாயகி! உன்னைக் கண்டதுமே முக்கனிச் சாற்றில் கற்கண்டு சேர்த்துப் பருகியது போலிருக்கிறது!''

அரண்டு போனாள் ஆடலரசி ஜோதி.

(தொடரும்.



Smt. Rengamony

In fond and affectionate memory of

**Smt. RENGAMONY**

**Born: 25.3.1925**

**Died: 29.8.1972**

Beloved wife of
S. Padmanabhan.
Affectionate mother of
Jana and Kanna,
mother-in-law of
J. Gopalan & Malathy,
Grandmother of
Sandhya & Srinivas.

# பிஞ்சு

விவேகி

ஒவ்வொருவரையாக இறக்கிவிட்டுக் கொண்டு போனல் கடைசியில் வருவது தான் சின்னியின் வீடு. சின்னிக்கு முந்தி அவள் ஒருத்தியை மட்டும் சைக்கிள் ரிக்ஷாவில் அம்போவென்று விட்டு விட்டு மோனிகா இறங்கிவிடுவாள்.

அவள் இறங்கியதற்கு அப்புறம் ஐந்து நிமிஷம் சின்னிக்காக மட்டும் சிங்காரம் சைக்கிள் ரிக்ஷாவை மிதிக்க வேண்டும். அந்த 'ஏரியா'விலிருந்து அவள் ஒருத்தி தான் வருகிருள். புறப்படும்போதும் அவளுக்காகத்தான் அந்த மூலைக்குப் போய் விட்டு அங்கிருந்து முதலில் சின்னி அப்புறம் மற்ற குழந்தைகள் என்று தொடங்குவான் சிங்காரம். ஒவ்வொரு நாளும் அந்தக் கடைசிக்குப் போய்விட்டு வர அவனுக்கு அலுப்புதான்.

''இந்த மாசத்தோட கடைசி. நான் இனிமே அவ்வளவு தூரம் வரமுடியாது சின்னி. ஒங்க அம்மாகிட்டே சொல்லிடு'' என்பான்.

''அது எங்க அம்மா இல்லே.... சித்தி!''

''சரி அதான், ஒங்க சித்திகிட்டே சொல்லிடு!''

''பாதர்ட்டே வேணு சொல்றேன்.''

''யார்கிட்டேயாவது சொல்லிக்கோ! நமக்கு படா பேஜாரா கீது. நம்பளால முடியாதுப்பா.''

''நான் ஒண்ணு சொல்லட்டா சிங்காரம்?''

எல்லாக் குழந்தைகளும் சிங்காரத்தைப் பெயர் சொல்லித்தான் கூப்பிடும். ரிக்ஷாக்காரன் என்ற பெயரைச் சிங்காரமே கடுமையாக ஆட்சேபித்துத் தன் பெயரைச் சொல்லிக் கூப்பிடும்படி கண்டிப்பு செய்திருந்தான்.

''இன்ன சொல்லப் போறே?''

''கேக்கறச்சயே கோவமாக் கேக்கறே.''

''சரி.... கோவமில்லே. சொல்லு!''

''எங்க மிஸ் சொல்றுங்க. மனசு பேஜாரா இருந்தா ஏதாவது ஸாங்ஸ் இல்லேன்னுக்க ரைம்ஸ் சொல்லிக்கிட்டே இருந்தா சரியாயிடுமாம்.''

''ஸாங்ஸ்னு?''

''ஸாங்ஸ் தெரியாது, ஸாங்ஸ்?''

''தெரியாது.''

''சினிமாலே எல்லாம் பாடறுங்களே!''

''ஓ.... சினிமாப் பாட்டா!''

''அதான்.''

''ரைம்ஸ்னு?''

''ரைம்ஸ்னுலும் பாட்டுதான். ஆனு அது சினிமாலே வராது. ட்யூன் கெடையாது.''

''அப்போ ஒன்னே ஒக்காத்தி வச்சுட்டு லொங்கு லொங்குனு நான் மிதிக்கிறதோட இல்லாமே சினிமாப் பாட்டு வேறே பாடிக்கிட்டு வரட்டா?''

''நீதானே பேஜார்னு சொன்னே!''

''சின்னி.... ஒனக்கும் புத்தியில்லே. ஒங்க மிஸ்ஸுக்கும் புத்தியில்லே.''

''எங்க மிஸ்ஸைப் பத்தி 'டாமேஜிங்கா' ஒண்ணும் சொல்லாதே சிங்காரம்! எனக்குக் கெட்ட கோவம் வந்துடும்.''

''சரி சொல்லலே! நீ ரிக்ஷாவிலே ஒக்காந்துனு கீறே. நான்தான் மிதிக்கிறேன்.



காலு இன்னு நோவு நோவும் தெரியுமா? அப்ப எப்படிப் பாட்டுப் பாட முடியும்?''

"ஐயாம் ஸாரி சிங்காரம்! ஒண்ணு செய். சின்னதா ஒரு ட்ரான்ஸிஸ்டர் வாங்கி வச்சுக்கோ. ஜாலியா பாட்டுக் கேட்டுட்டே மிதி. கால் வலியே தெரியாது.''

"அம்மாங்காசு இருந்தா நான் ஏன் ரிக்ஷா மிதிக்கிறேன்?''

"காசு இல்லியா.... ஐ.ஸீ அப்போ டெய்லி மோனிகா எறங்கினதும் நான் ஒரு பாட்டுப் பாடறேன். நீ கேட்டுட்டே வா.''

"சரி. இப்போ பாடு.''

"என்னடா பொல்லாத வாழ்க்கை! இதுக்குப் போயி அலட்டிக்கலாமா?''

"இன்னு கண்ணு. அடாபுடா பாட்டெல்லாம் பாடறே?''

"சரி. வேறே ஸாங் பாடறேன்.''

சிங்காரம் ஒவ்வொரு மாத முடிவிலும் இனிமேல் சின்னி இருக்கிற வீடு வரை போய் அவளை ஏற்றிக் கொண்டு வருவதில்லை என்றுதான் முடிவு செய்தான். மாதம் பிறந்த



தும் அவன் முடிவு மாறிவிடும்.

சின்னி வீட்டிலிருந்து மோனிகா வீடு வரை போகும்போது ஐந்து நிமிடம்,வரும் போது ஐந்து நிமிடம்,எவ்வளவு அலுத்துக் கொண்டாலும் அவனுக்கு ஒரு தனி உற்சாகம் இருக்கத்தான் செய்யும். தொண தொணவென்று எதையாவது பேசிக் கொண்டு, பாட்டோ 'ரைம்ஸோ' சொல்லி, அன்றைய பள்ளி அனுபவத்தைப் பகிர்ந்து சின்னி தன் சிறிய உலகம் நாளுக்கு நாள் விரிவடைந்து வருவதை சிங்காரத்திற்கு அறிமுகம் செய்து கொண்டே வரும்.

"சிங்காரம் நேத்திக்கி டீ.வி. பார்த்தியா?"

"வெள்ளாட்றியா.சின்னி?"

"ஓ... ஐயாம் ஸாரி. ஒங்கிட்டே காசு இல்லேல்ல. மறந்தே போயிடறேன். ஏன் சிங்காரம் ஒங்கிட்டே காசு இல்லே. அதான் மன்த்லி நாங்கள்ளாம் தர்றோமே."

"அதெல்லாம் சேர்த்து வச்சு டீ.வி. வாங்கிடச் சொல்றியா?"

"யெஸ் மேன். யூ ஆர் கரெக்ட்."

"அது இன்னாது மேன்?"

"எங்க ப்ரண்ட்ஸையெல்லாம் நாங்க அப்படித்தான் கூப்பிடுவோம்."

"அதெல்லாம் வாணாம் கண்ணு! நீ சிங்காரம்னே கூப்பிடு."

ஒரே டிக்கெட்!

திருமதி பிராங் ஸ்காட் பதின் மூன்று குழந்தைகளை அழைத்துக் கொண்டு ஒரு பஸ்ஸில் ஏறினாள். ஒரு டிக்கெட்டுக்கு மட்டும் பணம் நீட்டினாள். கண்டக்டர், "ஒரு பள்ளிக் கூடத்தையே ஒரு டிக்கெட்டுக்கு அழைத்துச் செல்ல முடியுமா?" என்று மறுத்தான். "எல்லாம் என் குழந்தைகள்தாம். எந்தக் குழந்தைக்கும் ஐந்து வயதுக்கு மேல் ஆகவில்லை. எனவே எனக்கு மட்டும்தான் டிக்கெட்" என்று வாதிட்டாள் திருமதி ஸ்காட்.

அவள் ஐந்தாண்டு காலத்துக்குள் மூன்று முறை மூன்று மூன்று பிள்ளைகளாகவும், இரண்டு முறை இரண்டு இரண்டு பிள்ளைகளாகவும் பெற்றெடுத்தவள்! இறுதியில் வெற்றி பெற்றது திருமதி ஸ்காட்தான்!

— திருச்செங்கோடு ப. கந்தசாமி



"சரி சிங்காரம். நீ எப்ப டீ.வி. வாங்கறது! எப்பப் பார்த்தாலும் காசு இல்லே, காசு இல்லேன்னே சொல்றியே."

"நீங்க குடுக்கற காசெல்லாம் சோறு துன்றதுக்குக்கூட காணாது சின்னி. டீ.வி. எல்லாம் ரொம்ப விலே. நான்லாம் இந்த ஜன்மத்திலே வாங்க முடியாது."

"அப்படியா.... ஸோ ஸாரி சிங்காரம்! நேத்திக்கி டீ.வி.லே ஒரு வார் பிக்சர் காட்னாங்க பாரு! ஒரே டிஷூம் டிஷூம். எல்லாரும் ரைஃபிள் எடுத்துட்டு எல்லோரையும் சுடறாங்க. ஒன் பை ஒன்னு எல்லாரும் 'டெட்.' ஒரே ஒரு நாய்க்குட்டி மட்டும் தண்ணி கெடைக்குமான்னு பார்த்துட்டே இங்கியும் அங்கியும் ஓடித்து. ரொம்ப டச்சிங்!"

"அப்படியா?"

"ஒனக்கு நாய்க் குட்டி பிடிக்குமா சிங்காரம்?"

"பிடிக்கும்."

"இந்த ஜபா இருக்கான் பாரு சிங்காரம்! அவன் ரொம்ப பேட் பாய்!"

சிங்காரம் ஜபா, சுந்தர், நந்தினி, இமானுவேல், ஜெகன் நிவாஸ் என்ற சில பேரைச் சந்தித்ததே இல்லே. எனினும் அவர்கள் சின்னியின் அன்றாடப் பேச்சில் ஒரு நாள் விட்டு ஒரு நாள் இடம் பெறுவார்கள். பெயரளவில் சிங்காரம் அவர்களைத் தெரிந்து வைத்திருந்தான்.

"ஏன்?"

"அவன் நாய்க் குட்டியைப் பார்த்தா கல்லால அடிக்கிறான். அது கத்திக்கிட்டே ஓடுறா ஈ..ஈ...ன்னு இளிக்கிறான். ஸ்டுபிட்."

"நீ அடிக்கமாட்டியா?"

"நோ.... நெவர்! எங்க மிஸ் சொன்னாங்க. யாருமே யாரையுமே அடிக்கக் கூடாதாம். எனிமீஸைக்கூட அடிக்கக் கூடாதாம்."

"அப்போ நீ ஜபாவை அடிக்க மாட்டியா?"

"மாட்டேன். அவன் பெரியவன். செகண்ட் ஸ்டாண்டர்ட் படிக்கிறான். நான் பர்ஸ்ட் ஸ்டாண்டர்ட்தானே.... அதோட அவன் ஒண்ணும் எனக்கு எனிமி இல்லே."

"ஒனக்கு எனிமி உண்டா?"

"அது சீக்ரெட். நான் சொல்ல மாட்டேன்."

"சிங்காரத்துக்கிட்டேகூடச் சொல்ல மாட்டியா சின்னி?"

"நீ போயி வீட்லே சொல்லிடுவே!"

"சொல்லமாட்டேன்."

"ப்ராமிஸ்?"

"ப்ராமிஸ்!"

"இந்த சித்திதான் என்னோட எனிமி."

"ஏன் அப்படிச் சொல்றே?"

"டெய்லி டாடியைத் திட்டுது சித்தி. என்னை ஏன் மேரேஜ் பண்ணிக்கிட்டீங்க... என் தலையெழுத்து இந்த ரெண்டு சனியனையும் கட்டி அழ வேண்டியிருக்குன்னு கத்தும்! சித்திக்கு ஒரு தம்பிப் பையன் இருக்கான்லே. அவனுக்கு வயத்து வலி வந்து ஒண்ணு

அழுதா அவனேயும் தொப் தொப்னு போட்டு அடிக்குது. டாடிக்கு என்னிக்காவது கோபம் வந்துச்சோ, ஒரே தாம் தூம். எனக்குத்தாம்பா ஒரே ட்ரபிள்.''

''இன்னு ட்ரபிள்?''

''சித்தி அப்புறமா என்னேயும் அடிக்கும். நான் 'அம்மா அம்மா'ன்னு கத்தின்டே அழுதா அதுக்கும் அடிக்கும். 'இளேயாள் கொடுமைன்னு நாலு பேரு சிபாரிசுக்கு வரணுமாக்கும்'னு கத்தும்.''

அதைச் சொல்லும்போது சின்னி இரண்டு கையையும் ஆட்டி ஆட்டி சித்தி மாதிரியே குரலே மாற்றி அபிநயம் செய்து காட்டும். சிங்காரத்துக்குத்தமாஷாக இருக்கும்.

''எங்கே எங்கே இன்னொரு தபா செஞ்சு காட்டு!''

''......''

''என்சின்னியில்லே! இன்னும்ஒருதபா...''

''ம்ஹூம்! மாட்டவேமாட்டேன்!'' சின்னி ஒரேயடியாக பிகு பண்ணிக் கொள்வதைப் பார்த்து, சிங்காரம் வண்டி ஓட்டுவதையே நிறுத்திவிடுவான்.

''ஐயோ! லேட் ஆயிடும் சிங்காரம் போகலாமே!''

''நீ சீக்கிரமா செஞ்சு காட்டு, நான் வேகமா மிதிச்சு உன்னே நேரத்துல கொண்டு சேர்த்துடறேன்.''

போலிக் கோபத்துடன் சின்னி முறைத்து விட்டு மறுபடியும் அபிநயம் செய்து காட்டும்.

''சிங்காரம், ஒனக்கு மேரேஜ் ஆயிடுத்தா?''

''மேரேஜ்னு கல்யாணம்தானே!''

''ஆமா.''

''ஆயிடுச்சு.''

''பர்ஸ்ட் ஒய்ஃபா, செகண்ட் ஒய்ஃபா?''

''அப்படின்னு?''

''நீ ரெண்டு கல்யாணம் பண்ணிண்டியா?''

''ஒரு கண்ணாலம் கட்டிக்கிட்டே அவளுக்குக் கஞ்சி ஊத்தி பூ வாங்கிக் கொடுக்க எனக்கு வக்கில்லே. நா எங்கே ரெண்டாவது கண்ணாலம் கட்டிக்க?''

''எங்க டாடி பாவம்! ரெண்டு மேரேஜ் பண்ணிண்டார்.''

''ஏன்?''

''மம்மி செத்துப் போய்ட்டா! அப்புறம் அப்பா எப்படி ஒய்ஃப் இல்லாம இருப்பார்? அதனாலதான் இந்த சித்தியை ரெண்டாவது மேரேஜ் பண்ணிண்டார்!''

சிங்காரம் அப்போது திரும்பிப் பார்த்தான். சின்னி வழக்கம் போலவே ஊர்வம்பை அலசும் பெரிய பாட்டி மாதிரிதான் உட்கார்ந்து கொண்டிருந்தாள். ஆனாலும் சிங்காரம் மனசில் குறி பார்த்து எறிந்த கல் போல அந்தச் சொல் பட்டு ஓர் ஊமை வலி. அவன் முகம் திருப்பி சைக்கிள் ரிக்ஷாவை மிதிக்கத் தொடங்கினான்.

ஒருநாள் சின்னி சிங்காரத்திடம் கேட்டது.

''நாம எல்லாம் செத்துப் போயிடுவோம் இல்லே?''

''ஆமா.... உசிராப் பொறந்தா மாண்டு தான் போவணும்.''

# வாசகர் பட்டி மன்றம்-5

## பரிசு ரூ 300/-



**தமிழகத்தில் இ. காங்கிரஸ்:**

**அ. தி. மு. க. வைச் சார்ந்துதான் இருக்க வேண்டும்**

**சுதந்திரமாகத் தனித்துத்தான் இயங்க வேண்டும்**

உங்கள் கருத்து என்ன?

அனுபவபூர்வமான எண்ணங்களேக் கல்கியில் சுமார் அரைப் பக்க அளவுக்கு எழுதி அனுப்புங்கள்.

இரு கட்சிகளிலும் ஒவ்வொரு கட்டுரை சிறந்ததெனத்தேர்வு பெற்றுப்பிரசுரமாகி தலா ரூ 100 பரிசு பெறும்.

தவிர இரு தரப்பிலும் ஐந்து ஐந்து கட்டுரைகளிலிருந்து முக்கியமான ஒவ்வொரு கருத்து மட்டும் பிரித்தெடுக்கப் பட்டுப் பிரசுரமாகும். இவற்றுக்கு ஆறுதல் பரிசு தலா ரூ 10.

ஒவ்வொரு கட்சியும் பெறும் மதிப்பெண்களின் விவரமும் இடம் பெறும்.

**முடிவு தேதி: 15.9.86**

ஒரு கோரிக்கை: உறையின் மேல் பட்டி மன்றம் — 5 என்று குறிப்பிடவும்.

ஒரு நிபந்தனே: கீழே விலாசமெழுதி இந்த அரைப்பக்கத்தை முழுமையாகக் கத்தரித்து உங்கள் கட்டுரையுடன் இணேக்க வேண்டும்.

பெயர்: ..............................................

விலாசம்: ..............................................

..............................................



''உங்க எழுத்துதான் சார், என்னை எழுத்தாளனாக்கியது...''

''அப்படியா?''

''ஆமாம். இவரெல்லாம் எழுதறப்போ, நாமும் ஏன் எழுதக் கூடாதுன்னு நினைச்சேன்.''

— ஆர். வசந்தகுமார்.

''மேளக்காரர் உங்களைப் பார்க்க வந்திருக்கிறார்.''

''என்னவாம்?''

''மேளம் வாங்க லோன் மேளாவில் அவருக்குக் கடன் தர வேணுமாம்.''



''ஜபா, சபாஸ்டின், ஜெகன் நிவாஸ், மாலு, முரளி எல்லாரும்....?''

அல்லாரும்தான்.

''நீ நானு கூடவா?''

''ஆமாம்.''

சின்னி கொஞ்சம் யோசித்தது.

''ஒனக்கு, மம்மி இருக்காங்களா சிங்காரம்?''

''மம்மின்னு அம்மாதானே? இருக்காங்க.''

''யங்கா.... ஓல்டா?''

''கெழவியான்னு கேக்கறியா?''

''ஆமா.''

''கெழவிதான்! எழுபது வயசாச்சு. இன்னும் சாகாம என் உசிரை வாங்கிட்டிருக்கு.''

''திட்டாதே சிங்காரம். ஒங்க மம்மி பாவம்!''

சிங்காரத்திற்கு ஏனோ சின்னியிடம் போய் ஏண்டா தன் அம்மாவைத் திட்டினோம் என்றாகிவிட்டது.

''பின்னே இன்ன சின்னி.... எப்போ பாத்தாலும் சீக்கு, சீக்கு, சீக்கு! நான் ஒருத்தன் சம்பாரிச்சு எவ்ளோ மருந்து வாங்கியாந்து தர்றது?''

''காட் ஒங்க மம்மியைக் கூப்பிடலே. எங்க மம்மியைக் கூப்டுகிட்டார்!''

''ஒங்கம்மாவை நீ பார்த்திருக்கியா?''

''ஓ. எஸ். நான் எல்.கே.ஜி.யிலே சேர்ந்ததற்கு நெக்ஸ்ட் டேதான் மம்மி செத்துப் போனா.''

சிங்காரம் மேலே பேச்சுக் கொடுக்கப் பிரியப்படவில்லை.

ஒருசமயம் சிங்காரம் குழந்தைகளை ஏற்றிச் செல்ல வரவில்லை. சின்னியின் அப்பா மாதிரியே எல்லார் அப்பாக்களும் தங்கள் வாகனங்களில் குழந்தைகளை ஏற்றிக் கொண்டு போய் கான்வென்டில் விட்டுத் திரும்பவும் கூட்டி வந்து, அவர்களுக்கெல்லாம் இரண்டு நாள் ஆபீஸுக்கு லேட்டாகிவிட்டது. மாலையில் பர்மிஷன் வேறு போட்டுவிட்டு வந்தார்கள்.

மூன்றும்நாளே சிங்காரம் வந்துவிட்டான். சின்னியின் அப்பாவிடமும் மற்றவர்களிடமும் என்னமோ சொன்னான். யாரும் கோபப்படவில்லை. சிங்காரம் ஏன் வரவில்லையாம் என்று சின்னி தன் 'டாடி'யிடம் கேட்டது.

''ஊருக்குப் போய்ட்டானாம்.''

சின்னிக்கு நம்பிக்கை வரவில்லை. சிங்காரத்திடமே கேட்டது.

''எங்கம்மா செத்துட்டாங்க சின்னி!''

''அச்சச்சோ!''

சின்னிக்கு மிகவும் வருத்தமாக இருந்தது.

''ரொம்ப ஸாரி சிங்காரம்.''

''...............''

''ஒனக்கு அழ வந்துதா?''

''வந்துது.''

''ரொம்ப அழ வந்துதா?''

''ரொம்பத்தான் வந்துது.''

''நீ ரொம்பப் பாவம் சிங்காரம்.''

''இன்ன பண்றது. ரொம்பப் பாவம் தான்.''

எதிரில் ஒரு ஐஸ் வண்டி வந்தது.

சின்னி கைதட்டி, ''ஐஸ்.... ஐஸ்....'' என்று அந்த வண்டிக்காரனைக் கூப்பிட்டது. தன் பென்சில் பாக்ஸிலிருந்து இருபத்தைந்து பைசா நாணயத்தை நீட்டி ஒரு ஐஸ் வாங்கியது. பிறகு அந்த ஐஸை சிங்காரத்திடம் நீட்டியது.

''எதுக்கும்மா?''

''உனக்குத்தான்.''

''ஐயையே....''

''எங்க மம்மி செத்த அன்னிக்கி நான் ரொம்ப அழுதிட்டிருந்தேனா, எங்க டாடி ஐஸ் வாங்கிக் குடுத்தாரு. நீ பாவம் சிங்காரம். ஐஸ் சாப்பிடு. சரியாப் போயிடும்'' என்றது சின்னி.



பக்த சங்கம்.



சங்கர மடம் — சந்நிதி.

# பம்பாயில் குருவாயூர் முதல் திருப்பதி வரை

**த**மிழர்கள் உலகின் எந்தப் பகுதிக்குச் சென்றாலும் அங்கே கொஞ்சம் கொஞ்சமாகப் பொருள் சேர்த்து ஆலயம் கட்டுவது மரபாகிவிட்டது. பம்பாயை மட்டும் விட்டு வைப்பார்களா?

### சங்கரமடம்

ஆதி சங்கரருக்கு ஒரு கோயிலெழுப்பி, அவரை ஷண்மதஸ்தாபன மூர்த்தியாக முதன் முதலில் பிரதிஷ்டை செய்த பெருமை பம்பாய்—மாதுங்காவைச் சார்ந்த தமிழ் மக்களுக்கே உரியது.

1939ல் ஆரம்பிக்கப்பட்ட இந்த மடம், இன்றைய உன்னத நிலையை அடைந்தது 1978ல். அழகுடனும் கம்பீரத்துடனும் எழுந்து நிற்கும் இக்கோயில் நுழைவாயிலிலேயே நம்மைக் கட்டிப் போட்டுவிடக் கூடிய அழகிய சிற்ப அமைப்பும் கண்கவரும் வேலைப்பாடும் கொண்டது. கீதோபதேசம் செய்யும் கண்ணபிரான் வழிகாட்ட, படிப் படியாக ஆதி சங்கரரின் வாழ்க்கைச் சம்பவங்களைச் சுவர்ச் சித்திரங்களாக நாம் ரசித்தபடியே மாடி ஏறினல், பிரும்மாண்டமான கூடமும், அதில் சாந்த மூர்த்தியாய் அமர்ந்திருக்கும் ஆதி சங்கரரின் அமைதி தவழும் சந்நிதியும் நம்மை வரவேற்கின்றன. அவருக்கு வலப்புறம் கணநாதரையும், இடப் புறம் முருகனையும், வடப்புறம் சக்தியையும், கிழ்ப்புறம் சூரியனையும், தென்புறம் சிவபெருமானையும், மேற்புறம் நோக்கி விஷ்ணுவையும் ஆகம சாஸ்திரப்படியும் கலையழகோடும் ஸ்தாபித்துள்ளனர். இங்கு பிரதி தின பூஜைகள் மற்றும் கணபதி ஹோமம், சூர்ய நமஸ்காரம், வேத பாராயணம் போன்றவை தவிர விசேஷ நாட்களில் சிறப்பான வழிபாடுகள் நடக்கின்றன. சங்கர ஜயந்தியையொட்டி பதினெரு நாட்கள் தொடர்ந்து மஹா ருத்ரம் நடைபெறுகிறது. நவராத்திரியின்போது 'சதசண்டி ஹோமம்'மும் மஹா சிவராத்திரியின்போது இரவெல்லாம் பக்த கோடிகளால் செய்யப்படும் 'நம சிவாய' என்ற லட்சார்ச்சனையும் குறிப்பிடத் தக்கவை. இவைஎல்லாவற்றையும்விட சங்கர மடம் ஆற்றும் சீரிய தொண்டு, அவர்கள் இலவசமாக நடத்தும் வேத பாடசாலையிலும், சமஸ்கிருதப் பாட வகுப்புகளிலுமேயுள்ளது.

இந்த ஆலயத்தின் பிரும்மாண்டமான கூடம் ஆயுஷ்ய ஹோமம், உபநயனம், சீமந்தம் சஷ்டியப்தபூர்த்தி, சதாபிஷேகம் போன்றவை நடைபெறுவதற்கு அளிக்கப்படுகிறது. சங்கர ஜயந்தியன்று நடக்கும் தர்ம உபநயனம் பல நூறு ஏழைகளுக்கும் நடுத்தர வர்க்கத்தினருக்கும் பேருதவி. சங்கர மடத்துடன் இணைந்த அமைப்பு 'கைங்கர்ய சபா' வாகும். ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் பம்பாய் வந்திருந்தபோது தமிழன்பர்கள் அதிகமாக வாழும் மாதுங்கா, முலுண்டு, பாண்டுப், அந்தேரி போன்ற பகுதிகளில் இச்சபையைத் தோற்றுவித்தார்.

குறிப்பிட்ட தினங்களில் நோயாளிகளுக்குக் கனிகளும் உணவு வகைகளும் வழங்கு



° சங்கரமடம் — நுழைவாயில்.

° கும்பாபிஷேகத்தின் போது மலர் தூவ வருகிறது ஹெலிகாப்டர்.





° விக்ரோலி கோயில்.

வது, ஏழை மாணவ மாணவியருக்குச் சீருடை வழங்குவது, தர்ம விவாஹம், தர்ம உபநயனம் நடத்துவது போன்றவை இச்சபையினர் புரிந்து வரும் சில சீரிய பணிகள். 'உள்ளாரிட'மிருந்து பெற்று 'இல்லாரு'க்கு வழங்குவதே இவர்கள் நோக்கம்.

## ஆஸ்திக சமாஜம்

குருவாயூரப்பனையும் ஐயப்பனையும் ஒரே இடத்தில் கண்டு மகிழ வசதி செய்வது ஆஸ்திக ஸமாஜம். மாதுங்காவில் மிகத் தொன்மையான இந்த ஆன்மீக இயக்கம், இராமர் கோயிலுடன் 1953ல் ஆரம்பிக்கப்பட்டது; படிப்படியாக சுப்ரமணியர், நவக்கிரகங்கள், குருவாயூரப்பன், ஐயப்பன் ஆஞ்சநேயர் என்று பல தெய்வங்களின் பிரதிஷ்டையும் விமரிசையாக நடைபெற்றது.

1974ல் கொச்சு குருவாயூரப்பனின் (குட்டி குருவாயூரப்பன்) பிரதிஷ்டைக்குப் பின், இக்கோயிலின் மகிமை பன்மடங்கு கூடிவிட்டது. அழகிய சிறு கிருஷ்ண விக்கிரகம், குருவாயூரிலிருக்கும் கண்ணபிரானின் மறுபிரதி போன்றே தோற்றமளிப்பதால், பக்தர்களுக்குக் குருவாயூரிலேயே சென்று தரிசிப்பது போன்ற பக்திப் பரவசமேற்படுகிறது. சமாஜத்தில் நுழையும்போதே 'நாராயணா' எனும் திருநாமம் நமது செவிகளில் ரீங்கரித்த வண்ணமிருக்கும். பல பக்தர்கள் இதையே குருவாயூராகக் கருதி, அன்னப்பிராசனம், துலாபாரம் போன்றவற்றை நிறைவேற்றுகின்றனர்.

சபரிமலையில் யோகாசனத்தில் அமர்ந்திருக்கும் ஐயப்பனைப் போன்றே, அபய முத்திரை காட்டிச் சிறிய கர்ப்பகிரகத்தில் ஐயப்பசுவாமி எழுந்தருளியுள்ளார். சபரிமலையில் நடப்பது போன்றே பூஜைகளும், பக்தர்களின் காணிக்கைகளும் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது..

தங்கள் உபந்நியாசங்களை இந்த சமாஜத்தில் நிகழ்த்தாத பெரிய பிரவசன கர்த்தர்கள் கிடையாது. சமாஜத்தைச் சார்ந்த பெரிய கூடமொன்றுகலைநிகழ்ச்சிகளும்,உபநயனம்,

ஆயுட்க்ஷேமம், போன்ற விசேஷங்களும் நடைபெற வசதி அளிக்கிறது.

## ஐயப்பன் கோயில்

பாண்டுப்—விக்ரோலிக்கு இடைப்பட்ட காஞ்சூர் மார்க் பகுதியில், மலைப்பாங்கான பிரதேசத்தில் ஒரு குன்றின் மீது ஐயப்பன் கோயில் கொண்டிருக்கிறான். சபரிமலைக் கோயிலைப் போன்றே, 'மினி' சைஸில், பதினெட்டு படிகளுடன், சபரி மலைக் கோயிலுக்குண்டான நியம நிஷ்டைகள் பூஜை புனஸ்காரங்களுடன் இக்கோயில் பல்லாண்டுகளாக இயங்கி வருகிறது. சபரி மலைக்குப் போக இயலாத பக்தர்கள், இருமுடி அணிந்து, ஐயப்பன் நாமத்தைப் பாடிக் கொண்டு, பதினெட்டு படிகளேறி பூஜை செய்து ஒளிமயமான திவ்ய தரிசனத்தைப் பெற்றுப் புண்ணியம் பெறுவர்.

## விக்ரோலி சித்தி விநாயகர்

விக்ரோலியிலும் அதன் சுற்றுப்புறத்திலும் வசிக்கும் தமிழர்களின் பெருமுயற்சியாலும், 'திருப்பணி கிருஷ்ணன்' என்று பெயர் பெற்ற தமிழர் ஒருவரின் பேராதரவாலும் இக்கோயில் கட்டி முடிக்கப்பட்டது.

வைகாசி விசாகத்தன்று, நம் கிராமப் புறங்களில் காணப்படும் திருநாள் அங்காடிகள் போன்று, எக்கச்சக்கமான கடைகள், குடை ராட்டினம், ஜயண்ட் வீல், ஒரு நிமிஷ ஃபோட்டோ ஸ்டூடியோ என்று அமர்க்களப் படும்.

வாயில் செருகிய வேலுடன் இரவெல்லாம் விரதம் காத்து மறுநாள் காலை காவடி எடுப்பர். (ஏரோப்ளேன் காவடி கூட உண்டு). காவடியைச் சுமந்தவாறே தீமிதியும் நடக்கும். வெற்றிவேல் முருகனுக்கு அரோகரா என்ற ஒலி விண்ணை முட்டும். கோயிலையொட்டி ஒரு கல்விக்கூடமும் உள்ளது.

## மேலைக் கடற்கரையில் ஒரு திருச்செந்தூர்

ஸ்ரீ சுப்ரமண்ய சமாஜத்தினரால், திருமுருக கிருபானந்தவாரியாரின் ஆலோசனையின் பேரில், பக்தர்களின் பேராதரவுடன் 1980ல் கட்டி முடிக்கப்பட்டது இக்கோயில். செம்பூரிலுள்ள செட்டா நகர் பகுதியில், குன்று தோறும் ஆடும் குமரனுக்கு ஏழாவது படை வீடாகக் கம்பீரத்துடன் எழும்பி நிற்கின்றது.

இருபத்தாறு அடி உயரமுள்ள கோபுரமும், அழகிய சிற்பங்களும் கொண்ட இக்கோயிலில்தான் குன்றின் மேல் கோயில் கொண்டிருப்பது போன்ற எண்ணத்தை ஏற்படுத்தும் வண்ணம், பல மாடிகளைத் தாண்டி, உயர்ந்த இடத்தில் கொலு வீற்றிருக்கிறான் திருமுருகன்.

மூலவரான முருகனின் சந்நிதியைச் சுற்றிலும் விநாயகர், துர்க்கை, தர்ம சாஸ்தா, குருவாயூரப்பன், நடராசப் பெருமாள் ஆகிய கடவுளருக்குத் தனித்தனியே சந்நிதிகள்.

விநாயகர், முருகன், துர்க்கை ஆகிய தெய்வங்களுக்கு நித்தியபூஜை நிவேதனங்கள் முதலியன ஆகம சாத்திரப்படியும் குருவாயூரப்பன், தர்ம சாஸ்தா ஆகிய தெய்வங்களுக்குத் தாந்திரீக வழக்கப்படியும் நடைபெறுகின்றன.

இங்கே வருடந்தோறும் நடைபெறும் படி விழாவும் காவடி ஊர்வலமும் மிகவும் பிரசித்தம். திருப்புகழ் மணத்தை நாவினிக்க, செவியினிக்கப் பரப்பும் புண்ணியத்தை மேற்கொண்டிருப்பவர், 'திருப்புகழ் ராகவன்' எனும் தில்லிவாசி.

சமாஜத்தினர், கலைகளை வளர்க்கும் நோக்கத்துடன் 'ஷண்முகப்ரியா' என்ற சபையையும் சமுதாயப் பணி என்ற முறையில் ஆயுர்வேத கிளினிக் ஒன்றையும் கல்யாண மண்டபங்களாக இரு பொது அரங்கங்களையும் இக்கோயிலில் தோற்றுவித்துள்ளனர். நூற்றியெட்டு நாட்டிய கரணங்களை விளக்கும் சிற்ப அரங்கம், வேத பாடசாலை, யோகாசனப் பயிற்சி நிலையம், பழங்காலச் சுவடிகள் கொண்ட ஒரு நூலகம், சமயச் சொற்பொழிவுகள் நிகழ்த்தவெனப் பிரத்யேகமான அமைப்பு போன்ற வசதிகளுடன் சிறப்பான வகையில் கோயில் அமைக்கப்பட்டிருக்கின்றது. முடி காணிக்கை, திருக் கல்யாணம் போன்ற வைபவங்கள் நடைபெறுகின்றன. இக்கோயிலின் பஞ்சாமிர்தமும் சர்க்கரைப் பொங்கலும் பக்தர்களைச் சுண்டியிழுக்கும்!

## பம்பாயின் திருப்பதி

ஸ்ரீரங்கத்துக்கும் காஞ்சிக்கும் திருப்பதிக்குமாகத் தன் திவ்விய தரிசனத்தைக் காணச் சென்றுவர பம்பாய் வாசிகளுக்கு நேரமிராது என்பதற்காக ஃபனஸ்வாடியிலேயே இந்த மூன்று திருக்கோலங்களையும் திருமால் த்ரீ இன் ஒன்றாகக் காட்டுகிறார். கோட்டைக் கதவுகள் போன்ற பிரும்மாண்டமான நுழைவாயில், பதினாறு கால் மண்டபம், அதையொட்டி பிரதான வாயில், கோபுர வாசல், கிழக்குப் பார்த்த அழகிய கோபுரம், தங்க முலாம் பூசப்பட்ட த்வஜஸ்தம்பம், அதன் முன் பலி பீடம் இவையனைத்தும் நுழைவோரைத் தம் கம்பீர அழகால் கட்டிப் போட்டுவிடுகின்றன.



"இந்த 2" × 4" × 2" சைஸ் பிளாஸ்டிக் சோப்புப் பெட்டியை 2' × 4' × 2' சைஸ் அட்டைப் பெட்டியிலே வச்சு, அழகாய் பேக் பண்ணிக் கொடு. மேரேஜில் பிரசண்ட் பண்ணணும்."



"என் மனைவி தான் செஞ்ச 'தப்பை' ஒத்துக்கவே மாட்டா."

"எப்படி?"

"ரசத்துல உப்பு அதிகமுன்னு சொன்னேன். அதான், இப்போ 'ஃபேஷன்'ங்கிறா!"

— ஆர். வசந்தகுமார்.

அழகிய சலவைக் கற்களால் எழுப்பப் பட்டுஇருபக்கநுழைவாயில்களுடன் உயர்ந்து நிற்கிறது பிரதான கோயில். கர்ப்பக்கிருஹத்தில் நடுநாயகமாய் எழுந்தருளியிருக்கும் திருமால் திருப்பதியில் கோயில் கொண்ட ஏழுமலையானின் மறுபதிப்பாய்க் காணப்படுவதால், ஃபனஸ்வாடியை 'சின்னத் திருப்பதி' எனச் செல்லமாக அழைக்கின்றனர். லக்ஷ்மி நரசிம்மர், சக்கரத்தாழ்வார், ருக்மிணி சத்யபாமையுடன் ராஜகோபாலன், ஆஞ்சநேயர், சீதா லக்ஷ்மண சமேதராய் ஸ்ரீ ராமபிரான் முதலிய தெய்வங்களும் எழுந்தருளியுள்ளனர்.

திருப்பதியில் நடப்பது போன்றே டோலோத்சவம், கல்யாணோற்சவம், பூலங்கி சேவை, தோமால சேவை அனைத்துமுண்டு. திருப்பதிக்கு-வேண்டிக் கொண்டு அங்கே போக இயலாதவர்கள் இங்கே பிரார்த்தனையைச் செலுத்துகிறார்கள். சிலர் மொட்டை கூட அடித்துக் கொள்வதுண்டு. திருப்பதி குடை போல் இங்கேயும் திருமாலின் குடை ஊர்வலம் வருவதுண்டு; பக்தர்கள் ஒன்றரை லட்சத்துக்கு ஒரு பிரும்மாண்ட தேரைத் தங்கள் பக்தியின் வெளிப்பாடாகக் கோயிலுக்கு அளித்துள்ளார்கள்.

கோயில் பல தர்ம காரியங்களில் ஈடுபட்டுள்ளது. காசி பிரயாகையில் உள்ள இருபத்தைந்து ஸமஸ்கிருத பாடசாலைகளுக்கு நிதி கொடுத்து உதவுகிறது. வெள்ளம், வறட்சி நிவாரணங்களுக்கு ஏராளமான பொருளுதவி செய்கிறது. ஏழைகளுக்கு இலவச மருத்துவ உதவி அளிக்கும் ஆயுர்வேத ஔஷதாலயாவை நடத்துகிறது. வைணவ தர்மத்தை ஆராய ஆய்வுக் கேந்திரமும் ஏற்படுத்தியுள்ளது.

பம்பாயை அடுத்துள்ள "தாணே" மாவட்டத்தில் டோம்பிவிலிப் பகுதியில் இன்னொரு குட்டித் திருப்பதி அமைந்திருக்கிறது. 'பாலாஜி மந்திர்' என இக்கோயில் அழைக்கப்படுகிறது.

'அகோபில மடத்துத் திருக்கோயில்' செம்பூரில் எழும்பி நிற்கிறது. பெருமாள் தேவியருடன் தரிசனம் தருகிறார். இங்குள்ள ஆஞ்சநேயரும் விசேஷமானவர். அவருக்கு 'வடை மாலை' அணிவிக்கும் பக்தர்களின் பட்டியல் அவரது வாலைக் காட்டிலும் நீளமாக இருக்கும்!

## தென்னிந்திய பஜனை சமாஜம்

பம்பாயில், பல இடங்களில் பஜனை சமாஜங்கள் உண்டு; இருப்பினும் அவற்றிலெல்லாம் பழமையானதும், அவையனைத்திற்கும் வழிகாட்டி போன்றும் அமைந்துள்ளது மாதுங்காவில் அமைந்திருக்கும் தென்னிந்திய பஜனை சமாஜம்தான்.

தென்னகத்திலிருந்து வரும் வைதீகர்கள் அனைவருக்கும் இந்த சமாஜம்தான் வழிகாட்டி. இதன் வாயிலிலேயே நூற்றுக்கணக்கான வைதீகர்கள் நின்று கொண்டிருப்பார்கள்.

பொது மக்கள், தத்தம் வைதீகத் தேவைகளை, இந்த சமாஜத்துக்குத் தெரிவித்துவிட்டால் போதும்; அவரவர்க்கு வேண்டியவர்கள், ஆங்காங்கே அனுப்பப்படுவார்கள். அனைத்து வசதிகளும் செய்து தரப்படும்.

"நம்மூரிலிருந்து வரும் உபந்யாசகர்கள், வேத விற்பன்னர்கள் அனைவரும் முதலில் இங்கேதான் வருகிறார்கள். 'வரும் வித்வான்கள் எங்கள் சிபாரிசு தேடி வருவர்; அதன்பின் அவர்கள் மிகப் பிரபலமாகிவிடுவர்; அப்புறம் நாங்களே அவர்களைக் கௌரவிக்கும் நிலைக்கு உயர்ந்து விடுவர்!" என்கிறார் இங்கே பல்லாண்டு காலமாக அரும்பணியாற்றி வரும் கணேச வாத்தியார்.

அம்பாள் பிரதிஷ்டைக்குப் பின் இந்த சமாஜம் மிகப் பிரபலமாகிவிட்டது. தமிழர்கள் மட்டுமின்றிக் குஜராத்தி மராத்தியர்களும் தேவியின் மகிமையில் மயங்கிக் கிடக்கின்றனர். ஞாயிற்றுக்கிழமைகளில் ஜாதகப் பரிவர்த்தனையும் உண்டு. தினந்தோறும் விஷ்ணு சகஸ்ரநாமமும், புருஷ ஸூக்தமும் பாராயணம் செய்யப்படுவதால் பொதுமக்கள் பக்திப் பரவசத்துடன், செவிகளில்மோதும்இறைவனின் திருநாமங்களைக் கேட்கவென்றே அதிக அளவில் வருகின்றனர். பரமவைதிகமாகநடைபெறும்சமாஜங்களில் இது ஒரு சிகரம்.

## முலுண்டு பஜனை சமாஜம்

சனிக்கிழமை தோறும் பக்தர்களின் இல்லங்களில் பஜனை, திவ்ய நாம சங்கீர்த்தனங்களைப் பரப்பும்சீரியநோக்கத்துடன் இச்சபை ஆரம்பிக்கப்பட்டுப் பல ஆண்டுகளாகச் சிறப்பாக நடந்து வருகிறது.

தவிர, "சமஷ்டி உபநயனம்" எனும் சீரிய பணியைச் செய்து வருகிறது. ஐந்நூறு ரூபாய் செலவில், குழந்தைகளுக்கு உபநயனம் செய்யச் சகல வசதிகளும் அமைத்துத் தருகிறது. மேலும், 'வாணி வித்யாலயா' எனும் பள்ளியையும், கலை, நுண் கல்வி சம்பந்தமான வகுப்புக்களையும் இந்த சமாஜத்துடன் தொடர்பு கொண்ட ஓர் இயக்கம் நடத்துகிறது.

— ஜெயஸ்ரீ ராஜ்

# உயர்ந்த விலையில் ஒரு சட்டை

கதை: வேதா கோபாலன்
படம்: [signature]

காலையில் காப்பி கொடுக்கும்போதே கனகா, கணவன் ராமசாமியிடம்...






அன்று மாலை...




பிறந்த நாள் விழாவில்...




சில தினங்கள் சென்று ராமசாமி, வேலைக்காரியிடம்...




ராமசாமி காரியாலயத்துக்குப் புறப்படும் போது...




எதுக்குங்க வேஸ்ட்டா? நம்ம கண்ணனுடைய விளையாட்டுச் சாமான்ல புதுக் கருக்கு அழியாம ஏதாச்சும் இருக்கும். அதைக் கொடுத்தால் போதும்!


மறுநாள் வேலம்மாவின் குடிலில்..
வாங்கய்யா.. வாங்கம்மா... நீங்க வந்த சந்தோஷத்துல எனக்குக் கையும் ஓடலே, காலும் ஓடலே... என்னங்க... ஏதுமாவுக்கு லிம்கா வாங்கியாங்க...


கனகா, பிறந்த நாள் குழந்தைக்குப் பொம்மை பரிசளித்தபடி...
என்ன வேலம்மா... மாரிக்குப் புதுச் சட்டையெல்லாம் போட்டுப் பிரமாதப் படுத்தியிருக்கே.. உம்..?


எனக்கேதுங்க புதுச்சட்டை வாங்க வசதி? ஜட்ஜ் வீட்டுப் பாப்பாவுக்கு ஆண்டு நிறைவு நடந்துச்சா.. நிறைய பிரஜண்டு வந்துச்சாம். உன் குழந்தைக்கு வச்சுக்கன்னு தேவையில்லாத சிலதை ஜட்ஜ் வீட்டு அம்மா கொடுத்தாங்க...


கனகா-ராமசாமி வீடு திரும்பும் போது..
ஜட்ஜ் மாமிக்கு என்ன திமிர்! அது நாம வாங்கிக் கொடுத்த சட்டைதான்!
கண்ணனுடைய பழைய பொம்மையை மாரிக்குப் பரிசளித்த நம்ம திமிரை விடவா?

# நடந்தது

## சு.சமுத்திரம்

"**போ**ன மாதம், இரண்டாம் தேதி... சேல்ஸ் அஸிஸ்டெண்ட் பண்டாரம் மங்களூருக்கு டூர் போனான். ஐந்து நாள் அங்கே இருந்துட்டு ஒன்பதாம் தேதியே இந்தப் பெங்களூருக்கு வந்திருக்கணும். இந்த ஒன்பதாம் தேதி போய் இருபத்தஞ்சு நாளாகுது. ஆளைக் காணலே...!

"ஒரு வேளை, மங்களூர்லேயே உடம்புக்குச் சுகமில்லாமல் ஆஸ்பத்திரியில் கிடக்கானோ என்னவோ? வழியில கார்ல, லாரில அடிபட்டு."

"என்ன ஸார் நீங்க? போன வாரம் நாம் ரெண்டு பேரும் அவனை மெஜஸ்டிக் பஸ் ஸ்டாண்ட்ல பார்த்தோமே....?"

"பார்த்தோம். பட், என்குயரி ஆபீஸருக்காக இப்படிக் கேட்டேன். ஆமாம் என்ன செய்யலாம் என்கிறே.....?"

"அவன் வேலையில் இருந்து சொல்லாமல் கொள்ளாமல் விலகி இருக்கான். இதுக்காக மத்திய அரசு ஊழியர் ஒழுங்கு விதிமுறைகளின்படி சஸ்பெண்ட் செய்யணும்..."

"தயக்கமாய் இருக்குப்பா....

"நாம் ரெண்டு பேரும் ஒரு தமிழனைச் சட்ட விரோதமாய்க் காப்பாற்ற முயற்சி செய்கிறதாய் ஆபீஸ்ல யாரும் பேசப்படாது பாருங்கோ....

"பேசறாங்களா?"

"ஒங்க காதுல விழலையா? இந்த மவன் ராமானுஜம் தமிழோருக்கே சப்போர்ட் மாடுதாரே.... அவனிகே ஒதி பேக்கோன்னு சொல்றது ஒங்க காதுக்கு இன்னும் வந்து சேரலையா?"

"அடப்பாவி.... அப்படியா? கொண்டு வா, கொண்டு வா.... சஸ்பெண்ட் ஆர்டர் டிராப்டைக் கொண்டு வா. கெட்டவன் பண்டாரத்துக்காக நாம கெட்ட பேர் வாங்க முடியாது."

நிர்வாக அதிகாரி பலராமன், தன் ஒட்டகச் சிவிங்கி உடம்பை ராமானுஜம் தலையில் சுமத்தப் போகிறவர்போல், சாய்வாய் எழுந்து, பேண்டை இரண்டு கைகளாலும் இடுப்புக்கு மேல் தூக்கியபடியே நின்றார். அலுவலகத்திற்கு சாபக் கேடாகவும், தனக்குச் சாபம் கொடுப்பவனுமாக விளங்கும் பண்டாரத்தைத் தீர்த்துக் கட்டக் கிடைத்த நல்ல சந்தர்ப்பத்தை நழுவ விடாதவராய் நிம்மதியுடன் உள்மூச்சுவிட்டார். அப்போது உடம்பாலும் பழுத்துப் போன ராமானுஜம், ஒரு குடும்பம் நடுத் தெருவில் நிற்கப் போகிறதே என்று மூக்கால் அழுவது மாதிரி வெளிமூச்சுவிட்டார். அந்த மூச்சில் அடிக்கப்பட்டவர் போல் பலராமன், வெளியே வந்தார்.

வெளியேறிய பலராமன் அறையைத் தாளிட்டார். அவருக்கு டைப்ரைட்டர் சத்தம், பண்டாரத்தின் இழவு சத்தமாகக் கேட்டது. 'அடேய்.... பண்டாரம்.... யாரடா மீன் பெல்லோ? நானடா? யாரடா ஒட்டகச் சிவிங்கி? நானடா ஆபீஸ் மெழுகுவர்த்தியைக் கூட வீட்டுக்கு எடுத்துட்டுப் போறவன்....!'

பலராமன், டெபுடி டைரக்டரிடம் வந்து, காகிதங்களைக் கொடுத்தபோது, டெபுடி பதறினார். பேனாவை உதறுவதற்குப் பதி



லாக, கையை உதறினார்.

எப்படியோ பண்டாரத்தை சஸ்பெண்ட் செய்து வைத்த ஆர்டர், பியூன் மூலம் டெஸ் பாட்ச் கிளார்க் லில்லியிடம் வந்தது. அதைப் படித்துவிட்டு அவள் அசந்து போனாள். மெழுகுவர்த்தியை ஏற்றி சுவரில் மெழுகு திரவம் படும்படி கவிழ்த்துப் பிடித்தாள். ஆள்காட்டி விரல் மாதிரி இருந்த அரசாங்க முத்திரைக் கம்பியை வைத்து திரவத்தை அழுத்தினாள். அவன்தான் பண்டாரத்தை சஸ்பெண்ட் செய்தது மாதிரி அவனை வேகமாய்ப் பார்த்த அலுவலகர்களை ஒட்டுமொத்தமாய்ப் பார்த்தபடியே, லில்லி அழுங் குரலில் பேசினாள்.

கடைசியில் என் வேலை... வெட்டியான் வேலையாப் போச்சு. என்னை இந்த டெஸ் பாட்ச் செக்‌ஷன்ல இருந்து ஜீஸஸ் எப்போதான் வேறே செக்‌ஷனுக்கு மாத்தப் போறாரோ.... பண்டாரம் சஸ்பெண்ட் ஆர்டரை அனுப்பப் போற எனக்கு. இப்போ இருதயமே, இருதயமே.... இரு... இரு....''

லில்லி, மாரடைப்பு வந்தவள்போல் வாயடைத்து நின்றாள். அவள் பார்வை வாசல் பக்கம் திரும்பியது.

பண்டாரம் அலுவலகத்திற்குள் ஒரு காலும், வெளியே ஒரு காலும் வைத்தபடி, யாரோ ஒரு பெண்ணிடம் சாவகாசமாகப் பேசிக் கொண்டு நின்றான்.

மெல்லச் சிரித்தபடியே டெபுடி டைரக்டர் அறைக்குள் போனான். அந்தப் பதவிக்குரிய ராமானுஜத்தையும், நிர்வாக அதிகாரி பலராமனையும் அடிப்பது போல் கையைத் தூக்கி 'விஷ்' செய்துவிட்டு, மேஜை மேல் கிடந்த அட்டெண்டன்ஸ் ரிஜிஸ்டரில் தன் பெயருக்கு எதிரே கையெழுத்துப் போடப் போனபோது —

டெபுடி, நிர்வாகத்தைப் பார்த்தார் - யார் அவனைத் தடுப்பது என்பது மாதிரி; உடனே, 'நீங்கள்ளாம் ஆபீசரா....' என்பது மாதிரி பல்ராமன் பதில் பார்வையை வீசியபோது, ராமானுஜம் அந்த ரிஜிஸ்டரை வெடுக்கென்று பிடுங்கினார். பண்டாரம் பேனா, மேஜையைக் குத்தியது. அவன், அவரை நிமிர்ந்து பார்த்தபோது, ராமானுஜம் கத்தினார்.

''யூ ஆர் சஸ்பெண்டட்! ஆர்டர் லில்லி கிட்டே இருக்குது. வாங்கிக்கோ....!''.

பண்டாரம் சாவகாசமாக, தோளில் படிந்த ஒரு துரும்பைத் தட்டிவிட்டபடியே கேட்டான்.

''நானா? என்ன காரணத்துக்கு....?''

''ஒரு மாதமாய் ஆபீஸ் வராமல் ஊர் சுத்திட்டு வந்தால், ஒனக்கு சஸ்பென்ஷன்



கொடுக்காமல் கல்கண்டா கொடுப்பாங்க? கெட் அவுட் மேன்! ஏய், ரிஜிஸ்டரைத் தொடாதே!''

''நான் ஒண்ணும் ஊர் சுத்தல.... இந்த முப்பத்து நாலு நாளும் கடுமையான டூட்டில தான் இருக்கேன். கையெழுத்துப் போட விடுங்க ஸார். இல்லேன்னு ஒரு அரசாங்க ஊழியரை, அவர் கடமையாற்ற விடாமல் தடுத்த குற்றத்துக்கு ஆளாவீங்க. இ.பி.கோ. செக்ஷன்படி கைதுக்குரிய குற்றம்....''

''ரிஜிஸ்டரைக் கிழித்தாலும் கிழிப்பேனே தவிர, ஒன்னைக் கையெழுத்துப் போடவிட மாட்டேன். ஒரு மாதமாய் டூட்டிக்கு வராதவனுக்கு என்குயரிக்கு முன்னால இங்கே வேலையில்லே.''

''நான் டூட்டியிலதான் இருந்தேன் ஸார்.''

''என்னய்யா உளர்றே?''

''உளறல ஸார்... உண்மையைத்தான் சொல்றேன் ஸார். நான் ஒரு விசுவாசமான ஊழியன் ஸார். மங்களூருக்கு.... ஐந்து நாள் டூர்ல போகும்படி டூர் ஆர்டர் போட்டீங்க. உடனே நான் முந்நூறு ரூபாய் அட்வான்ஸ் கேட்டு விண்ணப்பம் போட்டேன். உடனே நீங்க, 'முந்நூறு ரூபாயையும் சாயங்காலமாய் டிராப்ட் எடுத்து அனுப்பி வைக்கறேன். இப்பவே நீ போ'ன்னு சொன்னீங்க. நானும் சுபீரியர் சொல்லிட்டாரேன்னு, பஸ்டிக்கெட் போகப் பத்து ரூபாயை மட்டும் பையில் வச்சுட்டு, மங்களூர் போனேன்; நீங்க டிராப்ட் அனுப்பினீங்களா? இல்லே. அப்புறம் தந்தி அடிச்சேன். ரெஸ்பாண்ட் செய்தீங்களா? இல்லே. ஆனால் சித்திர துர்க்கா போன திம்மையாவுக்கு அட்வான்ஸ் அனுப்பியிருக்கீங்க. பெல்லாரிக்குப் போன ஜோஷிக்கு நானூறு ரூபாய் கொடுத்தீங்க.... எனக்கு ஏன் அனுப்பலே?''

டெபுடி டைரக்டர், நிர்வாக பலராமனை 'ஏய்யா அனுப்பலே?' என்பது மாதிரி கண்ணால் கேட்டபோது, பலராமனும், 'நீங்க ஏய்யா சாங்ஷன்னு எழுதல?' என்று உதடுகளை ஆடவிட்டு, கண்களாலேயே பதிலளித்தார். பிறகு, டெபுடி ஊமையாகிப் போனதை அறிந்து அவரே — அந்தப் பலராமனே — பதிலளித்தார்.

''அதுக்காக ஒரு மாதம் ஆப்செண்ட் ஆயிடறதா?''

''யார் ஆப்செண்ட் ஆனது? இன்னொரு தடவை இப்படிக் கேட்டால் எனக்கு கெட்ட கோபம் வரும். நான் ஆபீசிற்கு டயமுக்கு வரக்கூடாதுன்னு நீங்க திட்டம் போட்டு, அட்வான்ஸ் அனுப்பாட்டாலும், என்னால கடமையாற்றாமல் இருக்க முடியல! கடமையாற்ற ஆசை ஒரு பக்கம்; காசில்லாத கொடுமை ஒரு பக்கம். கடைசியில் ஒரு தீர்மானத்துக்கு வந்தேன். இந்த மங்களூருக்கும் பெங்களூருக்கும் இடைப்பட்ட முந்நூறு கிலோ மீட்டர் தூரத்தை இருபத்து நான்கு நாட்களாய் நடந்தே கழிச்சேன்! இதோ இப்பத்தான் வரேன்! இன்னும் வீட்டுக்குக்கூடப் போகலே. வர வர ஆபீஸ்களில் தியாக உணர்வுக்கே மதிப்பில்லாமல் போச்சு!''

பண்டாரம், அட்டெண்டன்ஸ் ரிஜிஸ்டரில் கையெழுத்துப் போடுவதைப் பிரக்ஞை இல்லாமல் பார்த்துக் கொண்டிருந்த அந்த இரண்டு அதிகாரிகளும் தாங்களே சஸ்பெண்டானது போல் தவித்தார்கள். பலராமன், பதிலளிக்கும்படி டெபுடி டைரக்டரைப் பார்த்துகண்ணடித்தபோது, அவர் வாயடைத்

துப் போனார். பிறகு முனகினார்: "இதை நம்ப முடியாது....!"

"சில சமயங்கள்ல உண்மையா நடந்த விஷயம் கற்பனையையும் மிஞ்சக் கூடியது ஸார். இது மாதிரிதான் நான் நடந்து வந்ததும். அடேயப்பா! தர்மஸ்தலா காட்டுக்குள்ளே நடக்கும்போது நான் பட்ட பாடு. ஒரே மேடு.... ஏற முடியாத மேடு. ஆனாலும் ஏறி நடந்தேன். நேற்று அரிசாகுண்டே ஊர்ல தங்கினேன். அங்கிருந்து கடைசியில் புறப்பட்டு இப்போதான் வந்தேன்!"

"முந்தா நாள், ஒன்னை மெஜஸ்டிக் பஸ் ஸ்டாண்டிலேநானும்பலராமனும்பார்த்தோமாக்கும்!"

"முந்தா நாள், நான் தீபேடு ஊர்ல இருந்தேன். அப்படி இருக்கும்போது, நீங்க எப்படி என்னை மெஜஸ்டிக்லேபார்த்திருக்கமுடியும்? அதோடு ஒங்க ரெண்டு பேருக்கும் அங்கே என்ன வேலை? ஜனதா பஜார்ல கார்பெட் வாங்குனதுக்கும், சோபா ஸெட் வாங்குனதுக்கும் கமிஷன் கேட்டுப் போனீங்களா?"

"அடேய் ஒன் வாய் அழுகிடும்! கெட் அவுட்!"

"என் வீட்டுக்கா? சீட்டுக்கா?"

"ஒன் வீட்டுக்கு, அப்படி ஒன்று இருந்தால்...."

"ஓ.கே. என்குயரி வரட்டும். நான் சொல்றேன் — நல்லாவே சொல்றேன். டெபுடி டைரக்டர் ராமானுஜம் வேலையில்லாப் பட்டதாரியான தன்னோட மகன் கண்ணனை கௌரவமான என் வேலையில் சேர்க்க விரும்பி, அதுக்காக, என்னை மங்களூருக்கு டூர்ல அனுப்பி, நான் அங்கிருந்து உடனே திரும்பி வந்து டூட்டியில் சேரக் கூடாது என்கிற கெட்ட நோக்கத்தோடு, பயணத்துக்காக முன்பணம் முந்நூறு ரூபாயை அனுப்பாமல் சதி செய்தார். ஆனாலும் நான் அந்தச் சதியை முறியடித்து, முந்நூறு கிலோ மீட்டரை — இருபத்து நாலு நாள்ல நடந்து வந்தேன்னு சொல்றேன்."

ராமானுஜம் அதிர்ந்துவிட்டார். முன் பணத்தை அனுப்பி வைக்காத பலராமனையே சஸ்பெண்ட் செய்யலாமா என்று யோசித்தார். மோவாயைத் தடவிவிட்டபடியே, குழைவாகப் பேசினார்.

"உட்காரு மிஸ்டர் பண்டாரம். நீ முந்நூறு கிலோ மீட்டரையும் நடந்ததாய் நான் நம்பலாம். நம்பித் தொலைக்கறேன். ஆனால் மற்றவங்க நம்பமாட்டாங்களே?"

"என்ன ஸார் நீங்க? என் நடைப் பயணத்தை பாராட்டாமல்.... இருபத்து நாலு நாளாய்...."

"சரி, இருபத்து நாலு நாளாய் நடந்தே வந்தேன்னு வச்சுக்குவோம். இப்படி இவ்வளவு நாளுக்கும் ஆகியிருக்கக் கூடிய சாப்பாட்டுச் செலவுல நீ பஸ்லேயே வந்திருக்கலாமே....?"

"எப்படியோ சாப்பிட்டேன். நடந்து நடந்து கால் புண்ணாயிட்டுது! ஹாசன்ல தெரிஞ்ச டாக்டர்கிட்டே காட்டினேன். ஊசி போட்டார். மாத்திரை தந்தார். இந்தாங்க





மணப் பெண்ணின் தகப்பனார்: மாப்பிள்ளே...! உங்க பேர் கின்னஸ் புத்தகத்திலே வரணுங்கறதுக்காக இப்படியா பொண்ணு கழுத்துல 17 முடிச்சு போடறது?

— ஆர். அரிகோபி

மெடிகல் பில்."

"அடேய்! இது அக்கிரமண்டா!"

"நீங்க முன் பணம் முந்நூறை அனுப்பாததைவிடவா? சே! தியாகத்துக்கோ, கடமை உணர்வுக்கோ மதிப்பில்லாமப் போயிட்டுது பாருங்க.... மெடிகல் பில்லைப் பிடியுங்க ஸார். இல்லேன்னா என்குயரி வரட்டும்!"

"பிடிக்கறேண்டா, பிடிக்கறேன். அதே டாக்டர்கிட்டே கடன் வாங்கி பஸ்ல வந்திருக்கலாமே?"

"என்ன ஸார் நீங்க.... ஒரு கவர்மெண்ட் செர்வண்ட் மேலதிகாரிகளின் முன் அனுமதி இல்லாமல் கடன் வாங்குறது ஒழுங்கீனக் குற்றமாச்சே! விசுவாசமான ஊழியன் பண்டாரமா அதைச் செய்வான்? அதனாலே, ஹாசன்ல இருந்து பெங்களூருக்கு நடக்கப் பன்னிரெண்டு நாள் ஆயிட்டுது!"

"நம்புறதாய்ச் சொன்னால் நல்லது, நான் நம்புறேன். ஆடிட்காரர்கள் நம்பணுமே."

"ஆடிட்காரன் பில்லைக் காட்டினால் நம்புவான்! டூட்டியில் இருந்த ஐந்து நாளைக்கும் நடந்து வந்த இருபத்து நாலு நாளைக்கும் ஆக மொத்தம் இருபத்து ஒன்பது நாட்களுக்கும் பதினேழு ரூபாய் ஐம்பது பைசா வீதம் பயணப்படி பில் இது. பிடிங்க, பிடிக்கிறீங்களா இல்ல...."

"பிடிக்கிறேன், பிடிச்சுட்டேன்."

"அப்புறம் நடந்து வரும் ஊழியனுக்கு கிலோ மீட்டருக்கு எட்டு பைசா வீதம் கொடுக்கணும். இந்த முந்நூறு கிலோ மீட்டருக்கும் இன்னொரு பில். இதோ, பிடிங்க!"

"ஒனக்குப் புண்ணியம் உண்டு. பத்து நாளைக்கு மட்டும் பயணப்படி போடுப்பா. இந்தா பாருய்யா பலராமா, நீ குறுக்கே பேசப்படாது! உன்னால நான் பட்டது போதும். நான் ஒழுங்காய் ரிட்டயர் ஆகப் படாதுன்னு நீ நினைக்கிறே. அடேய் பண்டாரா! சொல்றதைக் கேளு ராஜா.... பத்து நாளைக்கு.... பத்தே பத்து நாளைக்கு....!"

"சரி! நாளைக்கு அதைப் பத்திப் பேசுவோம். இப்போ நான் சீட்டுக்குப் போகவா? வீட்டுக்கா.....?"

"நீ சீட்டுக்குப் போ! எனக்குத் தலை சுத்துது. நான் வீட்டுக்குப் போறேன்."

டெபுடி டைரக்டர் ராமானுஜம், வீட்டுக்குப் புறப்பட ஆயத்தங்கள் செய்தபோது—

பண்டாரம், கம்பீரம் கலையாமல், மங்களூரில் இருந்து பெங்களூருக்கு, எப்படிப்பட்ட தியாக உணர்வோடு நடந்தானோ, அதே உணர்வுடன் தன் இருக்கையை நோக்கி நடந்தான்!

# நோட்டுப் புத்தகங்களிலும் ஆபாசம்!

## வாசகர் குமுறல்

சமீப காலமாக மாணவர்களின் நோட்டுப் புத்தகங்களின் அட்டைப் படங்கள் அசிங்கமாக அச்சிடப்படுவது அதிகரித்துவிட்டது. சென்ற இரண்டு வருடங்களாகவே இது பற்றி பலர் குறைப்பட்டு எழுதியும் அரசு எந்த ஒரு நடவடிக்கையும் எடுக்கவில்லை. தற்போது அட்டைப் படங்கள் விரசத்தின் எல்லைகளையே எட்டிக் கொண்டிருக்கின்றன. இளம் தலைமுறையினரின் மனங்கள் களங்கப்படுத்தப்படுகின்றன.

— மேகதூதன், ஸ்ரீரங்கம்.

### தாய்மார்களே தயவு செய்து...

வாசலில் 'ஒன்றுக்கு' இருந்துவிட்டு உள்ளே வந்த குழந்தை, தன் அம்மாவிடம், "என்னைப் பாம்பு கடித்துவிட்டதம்மா" என்று சொல்லியிருக்கிறான். "போடா, நீங்கள் எல்லோரும் அங்குதான் தினமும் விளையாடுகிறீர்கள். பாம்பு கடித்திருக்காது. வேறே ஏதேனும் கடித்திருக்கும்" என்று அலட்சியமாய்ச் சொல்லியிருக்கிறாள் அக்குழந்தையின் அன்னை. "பின்னாடி கால்லே பாரும்மா. ரத்தம் வருது" என்று மகன் கூறியிருக்கிறான்.

பல் பட்டிருக்கும் அடையாளம் சிறிது தெரியவே, துணியைத் தேடி எடுத்து சாவதானமாக கட்ட, அதற்குள் அந்தக் குழந்தைக்கு சற்று மயக்கம் வருகிறார் போல் கண்கள் சொருக, அதைப் பார்த்ததும்தான் அப்பெண்மணிக்கு சுறுசுறுப்பு வந்து டாக்டரிடம் எடுத்துக் கொண்டு ஓடினாள். டாக்டரும் ஏதோ ஊசி ஒன்றைப் போட்டுவிட்டு, "குழந்தை தூங்கினால் 'டிஸ்டர்ப்' பண்ணாதீர்கள்" என்று சொல்லிவிட்டார். சாதாரணமாக விஷத்தை முறியடிக்க எதைக் கொடுத்தாலும் தூங்காமல் பார்த்துக் கொள்ளத்தான் சொல்வார்கள்.

ஒன்பது மணிக்கு ஆஸ்பத்திரிக்கு உயிரோடு எடுத்துக் கொண்டு போன குழந்தை, பதினொரு மணிக்கு உயிர் பிரிந்த குழந்தையாக வந்தபோது, அதைக் 'குழந்தையின் விதி' என்று ஒப்புக் கொள்ள முடியவில்லை. ஒரு தாயின் அஜாக்கிரதையும் காரணம் என்று தோன்றியது.

தயவு செய்து தாய்மார்களே! உங்கள் குழந்தைகள் ஏதாவது வந்து சொன்னால் அதற்கு முக்கியத்துவம் கொடுத்து, உரிய நடவடிக்கையை உடனுக்குடன் எடுங்கள்.

— சுகந்தா ராமகிருஷ்ணன்,
கிழக்குத் தாம்பரம்.

### ஆறாத புண்!

நானும் நண்பரும் கும்பகோணத்திலிருந்து மண்ணியார் செல்லும் சோழன் பேருந்தில் சுவாமிமலையில் ஏறினோம். பயணம் செய்து கொண்டிருந்த கல்லூரி மாணவர்களும் நடத்துனரும் பஞ்சகச்சம், பன்னிரு நாமம் தரித்த எங்களை 'மாமா! மாமா!' என்று வரவேற்றனர். பார்ப்பனர் பேசும் கொச்சை மொழியில் கிண்டலும் செய்தனர். பொறுமையைக் கடைப்பிடித்துப் பயணம் செய்தோம். கண்டிக்க வேண்டிய கண்டக்டரும் அவர்களுடன் சேர்ந்தது மனவருத்தம் உண்டாக்கியது. பேருந்தில் திருவள்ளுவர் படத்தின் கீழே,

"தீயினால் சுட்ட புண் உள்ளாறும் —
ஆறாதே
நாவினால் சுட்ட வடு."

என்று எழுதியிருந்தது.

— ஆர். ரங்கராஜன், கங்காதரபுரம்.

### மனிதாபிமானம் இல்லையே!

பெரிய பெரிய ஆஸ்பத்திரிகள் இருந்தும் பிரபலமான, படித்த டாக்டர்கள் இருந்தும் அவர்களிடம் திறமையிருந்தும் நோயாளிகளைத் தக்கத் தருணத்தில் கவனிக்க வேண்டிய பொறுமையும் கடமையுணர்ச்சியுமில்லை. சென்னையில் பிரபலமாயிருக்கும் நாலைந்து ஆஸ்பத்திரிகளில் நானே அட்மிட்டாகி பிழைத்து வந்திருக்கிறேன். உயிர் கொடுக்கும் தெய்வமாயிருக்க வேண்டிய டாக்டர்களின் அசிரத்தையை, பண்பாடு இன்மையை யாரிடம் சொல்லியழுவது!

தவிர ஆஸ்பத்திரி வேலைக்காரர்கள் அனைவரும் பணம் பறித்து, நம்மைச் சக்கையாகப் பிழிந்து வெளியே அனுப்புகிறார்கள். மீதியை ரிக்ஷா, ஆட்டோக்காரர்கள் வீடு வந்து சேர்ந்ததும் பிடுங்கிக் கொண்டு விடுகிறார்கள். அவர்கள் கேட்கிற அநியாயக் கூலி தராவிட்டால் நடுத் தெருவில் கண்டபடி ஏசுகிறார்கள். மனம் புண்ணாகி விடுகிறது. இந்த ரணத்தை ஆற்றுவாரில்லையா?

— சாரதா சுப்ரமண்யம், நங்கநல்லூர்.

---

நன்றி



செல்வன் த்வாரகாநாத் — செல்வி சுகன்யா

7.8.86 வியாழக்கிழமையன்று தர்மபுரி வாசவி கல்யாண மண்டபத்தில் நடைபெற்ற திருமணத்திற்கும், அதையொட்டி 11.8.86 திங்கட்கிழமையன்று சென்னை மைலாப்பூர் வெங்கடேசுவர அக்ரஹாரத்தில் நடைபெற்ற வரவேற்புக்கும் பெருந்திரளாக வந்திருந்து, நேரிலும் தபால் மூலமாகவும் ஆசிகளும் நல்வாழ்த்துக்களும் வழங்கிய உறவினர்கள், நண்பர்கள், பிரமுகர்கள், எழுத்தாளர்கள், கவிஞர்கள், ஓவியர்கள், அரசு அதிகாரிகள், வங்கி ஊழியர்கள் — அதிகாரிகள், பத்திரிகையாசிரியர்கள் அனைவருக்கும் எங்கள் இதயம் கலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

சென்னை — 4,<br>12.8.86

ஹேமா ஆனந்ததீர்த்தன்<br>ஆ. ராஜசிம்மன்



பிரபல சினிமா ம்யூஸிக் டைரக்டர். மனைவி இறந்த பின் சங்கீதத்தையே மறந்தவர். மாறுதலுக்காக கொடைக்கானல் வர, அங்கே ஜாகை கொடுத்தவர்கள் வீட்டில் ஓர் இளம் பெண். அவள் விழியில் சோகம், மொழியில் வேதனை. மேற்சொன்ன இசையமைப்பாளர் அவள் பேரில் ஓர் ஈர்ப்பு கொள்கிறார். காதலா, நட்பா, வெறும் சந்தோஷமா என்று கடைசிவரை அவரால் பிராண்ட் குத்தப்படாத ஓர் உறவு. அவளுக்கு அவர் மீது மரியாதை கலந்த ரசனை. பின்னர் அது காதலாக பரிணமிக்க, அப்போது அவளது காதலனை (கல்யாணம் செய்துக் கொள்ள இருந்தவனை என்றால் இன்னும் பொருத்தம்) விபத்தில் உயிரிழக்கச் செய்தது இந்த சங்கீத டைரக்டர்தான் என்று அவளுக்குத் தெரிய வர....



கதை சுழலில் சிக்கிக் கொள்கிறது. அங்கங்கே குடை சாய்கிறது.

கொடைக்கானலின் ரம்மியத்தை தினேஷ் பாபுவும், செவி நரம்புகளுக்கு இனிமையை இளையராஜாவும் கொடுக்கத் தவறியிருந்தால் முன் பாதியே முள் மேல் உட்கார்ந்திருப்பது போலாகியிருக்கும். பின் பாதியை இவர்களாலும் காப்பாற்ற முடியவில்லை என்பது சோகம்.

தாராளமான ஃபிளாஷ் பேக் ஸீன்கள். ஷாப்பிங் போன இடத்தில் ஒண்ணரை ரூபாய் பொம்மையை வாங்கியே ஆக வேண்டும் என்று பிடிவாதம் பிடிப்பதாகட்டும், பின்னால் ஊடலோடு வீட்டில் முறுக்கிக் கொண்டு முகம் திரும்பும் போதாகட்டும், தான் கர்ப்பம் என்பதை கணவனிடம் சொல்கையில் ஏற்படும் இயல்பான கூச்சமாகட்டும் — சிவகுமாரின் மனைவியாக வரும் மேனகா — தமிழில் தொடர்ந்து நடிக்க மாட்டாரா என்ற பசியைக் கிளப்பி விடுகிறார்.

சுரேஷ் — நதியா காட்சிகளில் அழுத்தம் இல்லை. மேம்போக்கான ட்ரீட்மெண்ட். சுரேஷும் சரி, நதியாவும் சரி, வாய்ப்புக் கொடுத்தவரை சரியாய்த்தான் செய்திருக்கிறார்கள்.

# உனக்காகவே வாழ்கிறேன்

சிவகுமாருக்கு எடுபிடியாய் வந்து சேரும் செந்திலைக் குறிப்பிட்டாக வேண்டும். 'எல்லா ஸிச்சுவேஷனுக்கும் என்கிட்டே பாட்டு இருக்கு' என்று பீற்றிக் கொண்டு பழைய பாடல்களை எடுத்து வீசி அமர்க்களப்படுத்துகிறார். பின்னணிப் பாடகியின் பெயரை யாராவது வைத்துக் கொண்டிருந்தால் அவரைக் கல்யாணம் செய்து கொண்டு மூன்று பெண்டாட்டிக்காரராய் தவிப்பதும் சுவாரஸ்யம்.

எப்போது சுரேஷ் இறந்து போன விபத்தில் சிவகுமாரும் இன்வால்வ் ஆகிவிட்டார் என்று தெரிந்துவிட்டதோ அப்புறம் 'மேல இன்னய்யா சீக்கிரம் சொல்லு' என்ற அலுப்பு பிரதானமாகிவிட்டது. அனுபவப்பட்ட டைரக்டர் ரங்கராஜ் இதை கவனிக்காதுவிட்டது நம் துர்பாக்கியம்.

கைவசம் இருக்கும் வேலைகளையெல்லாம் ஓரம் கட்டுங்கள். எந்தத் தொந்தரவும் குறுக்கிடாதே? சரி வாருங்கள், ஒரு கதை கேட்போம்.

ராஜேஷ் என்று ஓர் எழுத்தாளர். அவர் தன் மாமாவை மருத்துவமனையில் கவனித்துக் கொண்ட நர்ஸைக் காதலிக்கிறார். நர்ஸும் பதிலுக்கு டிட்டோ என்கிறார். காதல் கைகூடாமல் ராஜேஷ் மாமன் மகளைக் கல்யாணம் செய்து கொள்கிறார். இதற்கிடையில் அந்த நர்ஸை வேறு ஒரு டாக்டர் காதலிக்கிறார். நர்ஸின் தங்கை, ஊருக்கு வந்த ராஜேஷைக் காதலிக்கிறாள். ஊருக்கு அவள் அக்காவும் (அதாவது நர்ஸும்) வந்து சேர்கிறாள். நர்ஸைக் காதலிக்கும் டாக்டரும் அதே ஊரில் இருக்கிறார். நர்ஸின் தங்கை தன்னைக் காதலிப்பது தெரியாமல் எழுத்தாளர் நர்ஸை மறுபடி காதலிக்கலாமா என்று யோசிக்க, ஆஸ்பத்திரியில் இருக்கும் அவர் மனைவியை நினைத்து.....

— எங்கே ஓடுகிறீர்கள்? புரியவில்லையென்றால் முதல் வார்த்தையிலிருந்து மறுபடியும் படிக்க வேண்டியதுதானே?

சரி எல்லாச் சிக்கல்களும் விழுந்துவிட்டன. அப்புறம்?

ஆக்ஸிடெண்ட்டில் காலிழந்த அந்த தங்கைக்காரிக்காக தன் காதலைத் 'தியாகம்' செய்ய நர்ஸ் அக்கா முன்வருகிறாள். முற்றும் போடப் போகிறார்கள் என்று சீட்டுக்கடியிலிருந்து ஹெல்மெட்டை எடுத்துக் கொண்டால், வெயிட்!

அந்தத் தங்கைக்கு அக்காவின் 'தியாகம்' புரிய வேண்டுமென்பதால் தன்னைக் காதலிக்காத நர்ஸைக் கல்யாணம் செய்து 'தியாகம்' செய்ய டாக்டர் சம்மதம் தருகிறார். ஹப்பாடா என்கிறீர்களா? இன்னும் இருக்கிறது!

'என் மனைவிக்கு நான் துரோகம் செய்வதா' என திருவாளர் எழுத்தாளர் ஆஸ்பத்திரிக்குப் போக, கதைக்கும் இவருக்கும் இனி சிக்கல் வேண்டாம் என்று அந்த மனைவி மண்டையைப் போடுகிறார். முடிந்ததா இங்கே? அதுதானே இல்லை!

எல்லோரும் படுக்கையைச் சுற்றி நின்று அவரவர் தியாகம் பேச, தங்கை தன் பங்குக்கு அக்காவையும், அவள் காதலனையும் இணைக்க, நெஞ்சைப் பிடித்துக் கொண்டு, டயலாக் பேசி முடித்து, சட்டென்று தலை தொங்கிப் போக.....

இந்த இடத்தில் படம் முடிவடைந்துவிட்டதாக நினைவு. (ஆமாம், அப்புறம் அந்த டாக்டர் யாரைக் கல்யாணம் செய்து கொண்டார்?)

படத்தின் ஒரே பிளஸ் பாயிண்ட்—அமலா. துடுக்குத்தனமும், விளையாட்டு முகமுமாய் அவர் நடமாடும்வரை ஓ.கே. கதையோடு



# பன்னீர் நதிகள்

சேர்ந்து அவர் கால்களையும் உடைத்து படுக்கையில் போட்ட பின்னர்கூட, தன் துடிப்பையும், ஏக்கத்தையும், ஏமாற்றத்தையும் — சும்மா சொல்லக் கூடாது, நன்றாகவே செய்திருக்கிறார்.

லுங்கி கட்டிக் கொண்டு மொட்டை மாடியில் விச்ராந்தியாக உலாத்துவது போன்ற வேலையில்லாத ஸ்டீரியோ டைப் ரோல் சிவகுமாருக்கு.

ஜெயஸ்ரீ, நிழல்கள் ரவி — ஃப்ரேம்களை நிரப்பப் பயன்படுகிறார்கள்.

சங்கர் கணேஷ் இசையை ரசிக்கலாம்.

படத்திற்கு 'குழப்பிய குட்டைகள்' என்ற தலைப்பு இன்னும் பொருத்தமாய் இருக்கும்.

— ஜெயமன்மதன்

# புற்று நோய்க்கு ஆயுர்வேத சிகிச்சை



என் பெயர் குதிடேர நஞ்சம்மா. எனக்கு 44 வயது ஆகிறது. என் தாளாத வயிற்றுவலியைக் குணப்படுத்த 1979 இல் ஆபரேஷன் செய்து கொண்டேன். ஆனால் வலி குறையவே இல்லை. அதனால் டாக்டர்கள் என்னை ஒரு புற்றுநோய் நிபுணரைக் கலந்தாலோசிக்கும்படி கூறினார்கள். முதுகுத் தண்டின் அடிப்பகுதியில் எனக்குப் புற்று நோய் கண்டிருப்பதை அறிந்து பதினான்கு முறை ரேடியம் சிகிச்சை அளித்தார் அந்த நிபுணர். ஆனாலும் வலி குறையவில்லை. இந்த நிலையில் நான் ஹைதராபாத் சிக்கட் பள்ளியைச் சேர்ந்த டாக்டர் எம். பாபுராவிடம்போனேன். அவர் அளித்த ஆயுர்வேத சிகிச்சையால் குணமடைந்திருந்த ஒரு புற்று நோயாளி விடுத்திருந்த அறிக்கையைப் படித்திருந்தேன். பன்னிரண்டு வாரங்களுக்குத் தொடர்ந்து எனக்கு மருந்துகள் கொடுத்தார் புற்றுநோய் நிபுணர் டாக்டர் பாபுராவ். அதன் முடிவில் என்னைப் பரிசோதித்துப்புற்றுநோயின் அறிகுறிகள் கூட என் உடலில் இல்லை என்று உறுதி அளித்தார். என் நோய் குணமாகப் பெற்று இப்போது மகிழ்ச்சியாக வாழ்கிறேன். டாக்டர் எம். பாபுராவுக்கு என் நன்றி உரித்தானது.

குதிடேர நஞ்சம்மா,
மே/பா பி. ஸி. பூவையா, எஸ். பி. ஐ.,
ஸெயின்ட் மார்க்ஸ் சாலை, பெங்களூர் — 560 025.

| விலாசம் | போன் | நெம்பார்க்கும் கிழமை |
| --- | --- | --- |
| டாக்டர் எம். பாபு ராவ்<br>கான்சர் இன்பர்மரி (ஆபீஸ்),<br>1—1—271/3, சிக்கட்பள்ளி<br>ஹைதராபாத்—500 020 | 64735 | பிரதி வியாழன் & வெள்ளி |
| C/o. ஹோட்டல் சுதாரா,<br>உஸ்மான் ரோடு, தி. நகர்,<br>சென்னை—600 017. | 445164 | பிரதி சனி |
| C/o. ஹோட்டல் பிருந்தாவன்,<br>எம்.ஜி. ரோடு,<br>பெங்களூர்—560001 | 573271 | பிரதி ஞாயிறு |
| C/o. ஹோட்டல் கே.கே. இண்டர் நேஷனல்<br>தெற்கு ரயில் நிலையம் எதிரில்<br>எர்ணாகுளம்;<br>கொச்சின்—682 016. | 366010<br>366040 | பிரதி திங்கள் |
| C/o. ஹோட்டல் நட்ராஜ்,<br>பகட்கன்ஜ்<br>இம்பீரியல் தியேட்டர் அருகில்<br>புது தில்லி—110 055 | 522699 | பிரதி செவ்வாய் |
| C/o. ஹோட்டல் ஸிட்—டௌன்,<br>அந்தேரி ரயில்வே எதிரில்,<br>ஸ்டேஷன் (மேற்கு)<br>பம்பாய். | 628882 | பிரதி புதன் |



# நெருப்பாக நீ

இரண்டு கைகளையும் முதுகுக்குப் பின்னால் கட்டிக் கொண்டு, குறுக்கும் நெடுக்குமாகக் கூடத்தை அளக்கிறார் டாக்டர்.

சோபாவில் இரு கால்களையும் மடித்துப் போட்டுக் கொண்டு, வலது கையிலுள்ள, புகையிலையை இடது கைக்கு மாற்றி, அதை கோபுரமாய் குவித்து, வாயில் போட்டுக் கொள்வதற்குமுன் வாஞ்சையுடன் பார்த்தபடியே உட்கார்ந்திருக்கிறார் ஸ்டேஷன் மாஸ்டர்.

இவருக்கு இந்த புகையிலைப் பழக்கம் இருப்பது மட்டும் இவரது சகதர்மிணிக்குத் தெரியாது.

எப்போதும் போடும் ரகமில்லை... கொட்டைப் பாக்களவு வெற்றிலைப் பாக்குடன் சேர்த்து கடைவாயில் அடக்கிக் கொண்டால், கற்பனை அமிருத தாரையாகப் பெருக்கெடுக்கும். கொஞ்சம் சோம்பிக் கிடக்கிற மூளையைத் தட்டிவிட உதவியாக இருக்கும்.

அதுவும் தன் கைப்பணத்தில் வாங்க மாட்டார். போர்ட்டர் பூவராகன்.... இல்லாவிட்டால், எதிர் வீட்டு குப்பண்ணா, டாக்டர் வீட்டுக்கு வந்தால், வருகிற வழியிலேயே வெற்றிலைப் பாக்குக் கடையில் கொள்ளு கண்ட குதிரை மாதிரி ஒரு பார்வை....

''என்ன....''

''ஒரு ரூபா இருந்தா கொடுங்களேன்.''

''எதுக்கு?''

''வெத்தலே சீவலுக்கு. இன்னிக்கு சாப்பாடு கொஞ்சம் ஹெவி. பாகற்கா பிட்லே.... வாழைக்கா பொடிமாஸ்; படுத்தாப் போதும், தூக்கம் அள்ளிண்டு போகும் போல இருக்கு. நீங்க விசேஷமா வீடு தேடி, காரைப் போட்டுண்டு வந்து கூப்பிடறப்ப, நான் கும்பகர்ணனை சேவிக்கப் படாது பாருங்கோ.''

''ஓசியிலேயே ஹோமம் வளர்க்கற ஜென்மய்யா நீர்.''

''சொல்லாதீங்கோ.. உங்க வாயாலே அப்படிச் சொல்லாதீங்கோ. இந்தக் காலத்துல அவனவன் பகற் கொள்ளை அடிக்கிறான். அடுத்தவன் குடியைக் கெடுக்கிறான். முழிச்சுண்டிருக்கறப்பவே முழியப் பிடுங்கிண்டுப் போயிடறான். அப்படி இருக்கச்சே, நானெல்லாம் ஏழை ஸ்டேஷன் மாஸ்டர். சம்சாரி. வாங்கற சம்பளத்துல வயிறு ரொம்பறதே பெரிய காரியம். ஓசியில ஹோமம் வளர்க்கறதாவது.... அந்தச் சமத்து இருந்தா நான் ஏன் கொடியப் பிடிச்சுண்டு அலையறேன்.''

டாக்டருக்கு 'சுருக்' கென்று நெஞ்சம் உறுத்தும். யாரையோ சொல்வது போல, மனிதர், தன்னைத்தான் குத்திக் காட்டுகிறார் என்பது தெரிந்தும் கண்டு கொள்ள முடியாத நிலை.

இப்போதும் அவர், ஸ்டேஷன் மாஸ்டர் புகையிலை போட்டு முடியும் வரையில் பொறுமையுடன் காத்திருக்கிறார். அவர் மனைவி பரிமளாவோ முகத்தைச் சுளித்தபடி இந்தக் காட்சியை சகிக்க முடியாமல் தவித்துக் கொண்டிருக்கிறாள்.

"என்ன எழவு இது. வாயில இருக்கறது அத்தனையும் உங்க மேலே அபிஷேகிக்கப் போறார்."

அவள் வாய் விட்டுச் சொல்லாவிட்டாலும் பார்வையே எச்சரிக்கிறது.

ஸ்டேஷன் மாஸ்டர், இதையெல்லாம் கவனிக்கும் நிலையில் இல்லை. பெரிய கண்களை, லாகிரியில் அரைச் செருகல் செருகிய படி, புகையிலைச் சாறு வழிந்து விடாதபடி அண்ணாந்தவாறு தலையாட்டுகிறார்.

"உம். இப்ப கேளுங்கோ."

"என்னத்தைக் கேட்கறது. நந்துவோட ஜாதகத்துக்கு ஏத்த மாதிரி, எங்க மல்லிகாவோட ஜாதகத்தை மாத்தினீங்களா?"

ஸ்டேஷன் மாஸ்டர், மிதப்பாக சட்டைப் பையைத் தட்டிக் காண்பிக்கிறார்.

"உம்ம பொண்ணு ஜாதகத்தை அப்படியிப்படி மாத்தலை.... சாட்சாத் சீதா தேவியோட ஜாதகத்தை அப்படியே தூக்கி இங்க வச்சு, 'மல்லிகா, டாட்டர் ஆஃப் ஷோ அண்ட் ஷோ'ன்னு மாத்திட்டேன்."

"எங்கேயாவது இசகுபிசகா மாட்டிக்கப் போறீர். போயும் போயும் சீதா தேவி ஜாதகத்தைத்தானா காப்பியடிச்சீர். கல்யாணமானவுடனே மாமனாரை பரலோகத்துக்கு அனுப்பினா. புருஷனோடக் காட்டுக்குப் போனா. எவனோ ஒருத்தன் அவளை கிட்நாப் பண்ணிட்டுப் போனான். திரும்பி வந்தாவது புருஷனோட சந்தோஷமா இருந்தாளா... ரெண்டு குழந்தைங்களோட வாழாவெட்டியா காலம் முழுக்க அழுது, மூக்கை சிந்தினா. 'இது சரியில்லே'ன்னு அந்த மனுஷன் சொல்லிட்டுப் போறான்."

"ஒரு பேச்சுக்குச் சொன்னா அதையே வேதவாக்கா எடுத்துக்கணுமா. ஜமீன்தார் என்ன கேட்டாலும் என் பதிலாலே திணற அடிச்சிடுவேன். அப்புறம்?"

"இந்தப்பிசாசுஒழியாதுபோலஇருக்கே."

"யாரு, அந்த மெட்ராஸ் பெண்ணா..."

"பின்னே,என்பெண்ணையாசொல்றேன். ஏன்யா பயமுறுத்தினது போதாதோ...."

ஸ்டேஷன் மாஸ்டர், அவரைப் பார்த்து கையமர்த்திவிட்டு, வாசல் வரையில் போய், புகையிலைச் சாற்றை துப்பிவிட்டு வந்தார்.

"ஜமீன்தாருக்கு எவ்வளவு பயம் அந்தப் பெண்கிட்ட இருக்குன்னு எனக்கு மட்டும் தான் தெரியும். ரெண்டு நாள் முன்னாலே என் வீடு தேடி வந்து 'ஹோ'ன்னு அழுதார்."

டாக்டர் கண்களை அகல விரிக்கிறார்.

"இதை நீர் சொல்லவே இல்லையே."

"எதுக்கும் நேரம் காலம் வர வேண்டாமா.... இந்தாங்கோம்மா. ஒரு தம்ளர் ஜலம்கொடுங்கோ. வாய்கொப்புளிச்சுட்டு வர்றேன்..."

பரிமளா கடுப்புடன் கொண்டு வந்து வைத்த தண்ணீர்ச் சொம்பை, புன்னகையுடன் எடுத்துக் கொண்டு வாசலுக்குப் போனவர், நிதானமாகத் திரும்பி வருகிறார்.

"டாக்டர் சார். நீர் அன்னிக்கு என்ன சொன்னீர். ஞாபகமிருக்கா?"

"என்ன சொன்னேன்?"

"மங்களாம்பாளோட நகை அத்தனையையும் ஜமீன்தாரே லாவிட்டாரோன்னு சந்தேகப்படலையா....?"

"ஆமா, இப்பவும் சந்தேகப்படறேன். இருபது வருஷத்துக்கு முன்னாடி நம்ம ரெண்டு பேரையும் கருவியா உபயோகிச்சு, கிடைச்சதெல்லாத்தையும் அந்த மனுஷனே...."

"கொஞ்சம் பொறுங்கோ. நகைகளைக் கொள்ளையடிச்சுதான் ஜமீன்தார் சொச்ச காலத்தையும் கழிக்கணும்ங்கற நிலைமை இல்லை. என்ன, பேசாம இருந்தா எப்படி? ஆமா, இல்லைன்னு ஒத்தை வார்த்தையில பதில் வரணும். நான் சொன்னது சரியா?"

"உம்."

"அப்படியிருக்கறப்ப அந்த நகைகளை, தன் சம்சாரத்துக்கிட்டயிருந்து பிடுங்கி, விற்கிற எண்ணம் அவருக்கு இல்லை."

"இல்லை."

"இளையாள் ஆசைப்பட்டா. மோக வெறி. சித்த முன்னாடி சீதையோட ஜாதக ராசியாலே அவ மாமனார் செத்ததாச் சொன்னேளே, உண்மையான காரணம் அது இல்லைங்காணும். கைகேயி கிட்ட இருந்த மோகம்தான் அவருக்கே எமனா வந்து வாய்ச்சது. அந்த வெறிதான் ராவணனைத் தன்னந்தனியா போர்க்களத்துல நிற்க வச்சது. ஆன்டனி, கிளியோபாத்ராவுலேயிருந்து, காலம்பற தந்தியல படிச்ச, கள்ளக் காதலுக்காக தாலி கட்டிய மனைவியை வெட்டிக் கொலை செஞ்ச ஆறுமுகம் பத்தின செய்தி வரைக்கும் எல்லாத்துக்கும், 'பேஸ்'—அடித்தளம், இதுதான்."

"நான் கதை கேட்கலை. எனக்கு நேரமுமில்லே."

"எனக்கும் நேரமில்லே. எழுந்து போகட்டுமா?"

"என்ன, இன்னிக்கு வார்த்தையில சுருதி கொஞ்சம் உச்ச ஸ்தாயியிலேயே இருக்கு."

ஸ்டேஷன்மாஸ்டர்சிரிக்கிறார்.டாக்டரின் வார்த்தைகளை லட்சியமே செய்யாதவர் போல பக்கத்திலிருக்கும் கண்ணாடி அலமாரியிலுள்ள பொம்மைகளை ரசிக்கிறார்.

"இன்னும் பல நிஜங்கள் வெளியில வந்தா, என் சுருதிக்கு எந்தப் பயலும் பக்க வாத்தியம் வாசிக்க முடியாதுன்னேன். டாக்டர் சார், நகைக்காக, பெண்டாட்டிய கொலை செஞ்சு மறைச்சிருந்தான்னா அந்த நகைகளை ரெண்டாந்தாரத்துக் கழுத்துல போட வேண்டியதுதானே.... என்ன தயக்கம். நீரோ, நானோ, வேண்டாம்னு கையைப் பிடிச்சுத் தடுக்கப் போறோமா.... அன்னிக்கு நாம ஒரு யோசனை சொன்னோம். அதும்படி நடந்தா, தலைக்கு ஒரு லட்சம் தர்றதா ஜமீன்தார் அகமகிழ்ந்து சொன்னார். அப்படித்தானே?"

"ஆமா."

"அது என்ன யோசனை?"

"அது எதுக்கு இப்ப...."

"சரி. சமயம் வர்றப்ப பேசிப்போம். நகைய ஒளிச்சு வச்சவர், என்கிட்ட அதைக்

கண்டு பிடிச்சுத் தரச் சொல்வாரோ....''

''தலை சுத்தறது....''

''எனக்கும்தான். ஒரு வாய் காப்பி இருந்தாத் தேவலை. ஆனா, இந்த வீட்டுல இன்ஸ்டண்ட் காப்பி. எனக்கு நாக்கு நீளம். ஃபில்டர் காப்பிதான் சரிப்படும். அதனாலே வாயைத் திறக்காம இருக்கேன்.''

ஆயிரம் பிகு செய்து கொண்டு ஸ்டேஷன் மாஸ்டர் சொன்ன விஷயம் இதுதான்:

ஜமீன்தார் லோகநாதனுக்கு இன்பாவை சென்னைக்கு அனுப்புவதற்கு முன், சில விஷயங்களை அவளிடமிருந்து, தப்புத் தப்பு, இன்பாவினுள் குடி கொண்டிருக்கும் மங்களாம்பாளிடமிருந்து, தெரிந்து கொள்ள வேண்டுமென்கிற உறுத்தல்.

இது பற்றிப் பேசுவதற்காகத்தான் ஸ்டேஷன் மாஸ்டரின் வீடு தேடி அன்று வந்தார்.

''வாங்கோ.... வாங்கோ... சொல்லி அனுப்பியிருந்தா நானே வந்திருப்பேனே...''

அவர், பஞ்ச பாத்திரத்தைத் தள்ளி வைத்துவிட்டு பவ்யமாய் வந்து நின்றார்.

''அந்தப் பெண்ணை விரட்டறதுக்கு முன்னாலே ரகசியமா சில காரியங்களைச் செஞ்சாகணுமே...''

''செஞ்சுட்டாப் போச்சு. இதுக்காகத் தானே நான் இருக்கேன். சொல்லுங்கோ.''

''மங்களாம்பாளின் நகைகள் என்னாச்சுன்னு....''

''மொதல்லே அவா எப்படி செத்துப் போனான்னு கேட்க வேண்டாமோ... சாதாரணமா எல்லாருக்கும் வர்ற சாவா.... துர்மரணமா, இது தெரிஞ்சாத்தானே நகையைப் பத்தி விசாரிக்க முடியும்?''

இதைச் சொல்லிவிட்டு, கீழ்க் கண்களால் ஜமீன்தாரைத் துளைத்து விடுகிறார் போலப் பார்த்தார்.

ஜமீன்தார், கல்யாண முருங்கை மரத்தையே பார்த்தபடி விரைவாய்ச் சொன்னார்.

''துர் மரணமானதாலேதானே இப்படி ஆவியா அலையறா....''

''அதுவும் சரிதான். அன்னிக்கு ராத்திரி நாம போட்ட திட்டத்துப்படி நடக்கலே. அதாவது ஜமீன்தாரிணிக்கு டாக்டர் கொடுத்த மருந்தை நீங்க கொடுக்கலே.''

''கொடுக்கலே.... கொடுக்கலே...''

''ஜமீன்தாரிணியோடத்தான் மாயவரம் போனேன்.''

''ஆமா, அங்கேயே அவ காணாமப் போயிட்டாளே!''

''த்சு.... த்சு.... அதான் சொன்னேனே, எவன் கூடவோ தொடர்பு இருந்ததுன்னு. மனுஷி சபலத்தைப் பாருங்கோ, மகா விஷ்ணு மாதிரி, குபேரன் மாதிரி நீங்க இருக்கேள்.''

லோகநாதனின் நெற்றி நரம்பு புடைத்தது.

''இப்ப அந்த விஷயம் வேண்டாம்.''

''ரொம்ப சரி.''

''இந்தப் பொண்ணை விசாரிக்கறபடி விசாரிச்சு நகையெல்லாம் எங்கேன்னு தெரிஞ்சுண்டாகணும்.''

''பேஷா.''

''அப்படி நடத்தற விசாரணை நமக்குள்ளே இருக்கணும்.... ரகசியமா...''

''...............''

''டாக்டருக்குக்கூடத் தெரிய வேண்டாம்.''

''ஐயோ, பின்னே, இதையெல்லாம் டமாரம் போட்டா சொல்லிண்டிருப்பா...''

''தகவல் கிடைச்சு, நகைகளும் கிடைச்சுட்டா, அப்ப தர்றதா சொன்ன லட்ச ரூபாயை இப்பத் தர்றேன்.''

''அது எப்படி அறுபத்தியாறுல லட்சம்னா எண்பத்தியாறுல எவ்வளவு? கணக்குப் போட்டுப் பார்த்தா..... சரி, சரி, நமக்குள்ள கணக்கு எதுக்கு? இதெல்லாம் ஒருத்தர் மேலே இருக்கிற அபிமானத்துல செய்யறது....''

''எப்படி விசாரிப்பீர்?''

''கவலையை இங்கே கொட்டுங்கோ.''

இப்படிச் சொன்ன ஸ்டேஷன் மாஸ்டர் அத்தனையையும் வாங்கி, டாக்டரிடம் கொட்ட, அவர் இடிந்து போய் உட்கார....

கன்னத்தில் கைவைத்து நின்ற பரிமளா, பக்கத்து அறையில் மல்லிகா ஏதோ நடிகரின் ப்ளோஅப் போஸ்டரை ஒட்டிக்கொண்டிருப்பதைக் கண்டதும் பல்லைக் கடிக்கிறாள்.

''இந்தா.... துண்டு துண்டா என்னது அது....''

''ஜிலு ஜிலு சினிமா மாசப் பத்திரிகைக்கு வருஷ சந்தா கட்டினா, நமக்குப் பிடிச்ச நடிகரோட போட்டோவை ஒவ்வொரு இதழ்லேயும் பார்ட் பார்ட்டா அனுப்பறாங்க. கால், கை, உடம்பு எல்லாம் கிடைச்சுடுத்து. தலைதான் பாக்கி.''

''இங்கே தலைபோற விஷயம் பேசிட்டிருக்கோம். உனக்குக் கொஞ்சமாவது பொறுப்பிருக்கா....''

''எனக்கும் இது தலைபோற விஷயம் தாம்மா....''

ஸ்டேஷன் மாஸ்டர் புன்னகை செய்கிறார். அபாரமான யோசனை மூளையில் பளிச்சிடுவதை முகம் சொல்கிறது.

(தொடரும்)

தந்தை: ''போயும் போயும் இந்தப் பையனைக் காதலிச்சிருக்கியே, இவனுக்குப் பொது அறிவே துளி கூட இல்லையே?''

மகன்: ''நான்தான் சொன்னேனே அப்பா! அவர் என்னைக் காதலிக்க ஆரம்பிச்சதும் உலகத்தையே மறந்துட்டார்னு!''

— படுதலம் சுகுமாரன்.





# கைலாசம்: நீதித் துறையின் இமயச் சிகரம்!

**க**ணவன் இறந்ததால் நிர்கதியான ஒரு பெண், பாலிசி தொகை கிடைக்காததால் எல்.ஐ.சி. மீது வழக்குத் தொடுத்தாள். எல்.ஐ.சி.யோ, "காலம் கடந்து இந்தப் பெண் பாலிசி தொகையைக் கேட்கிறாள்; அதனால் பாலிசி தொகையைத் தரமுடியாது" என்று சட்ட நுணுக்கம் பேசியது. நீதிபதி பி.எஸ். கைலாசம், எல்.ஐ.சி. தரப்பு வாதத்தை ஏற்கவில்லை. "இங்கு சட்ட நுணுக்கம் முக்கியமானதல்ல, மனிதாபிமான நோக்குடன் இத்தகைய வழக்குகளை நோக்க வேண்டும்" என்று வலியுறுத்தி அந்தப்பெண்ணுக்குச் சாதகமாகத் தீர்ப்பளித்தார்.

இப்படி பல வழக்குகளில் மனிதாபிமான நோக்கில் தீர்ப்பு வழங்கியது சட்ட நுணுக்கங்களைத்தாம் அறியாததால் அல்ல என்பதை வேறு பல சமயங்களில் நிரூபித்திருக்கிறார் கைலாசம். ஓர் உதாரணம்: நகர்புற நில வரிச் சட்டம் அமுலுக்கு வந்தபோது அதில் சில பகுதிகளை எதிர்த்து நிலச் சொந்தக்காரர்கள் வழக்குத் தொடுத்தனர். ஐந்து நீதிபதிகள் கொண்ட "ஃபுல் பெஞ்ச்" அமைக்கப்பட்டது. தீர்ப்பில் நான்கு பேர் ஒருமித்த தீர்ப்பு வழங்க, கைலாசம் மட்டும் கருத்து மாறுபட்டு தனி தீர்ப்பு வழங்கினார். ஆனால் பெரும்பான்மைத் தீர்ப்புப்படி நிலச் சொந்தக்காரர்களின் வழக்கு தோற்றது. அவர்கள் உச்ச நீதிமன்றம் சென்றனர். அங்கே வழக்கை வென்றனர். உச்ச நீதிமன்றம் நிலச் சொந்தக்காரர் பக்கம் தீர்ப்பு வழங்கிய போது கைலாசத்தின் தீர்ப்பையே சரியென ஏற்றுக் கொண்டது!

புகழ் பெற்ற வழக்கறிஞர்களான வி.எல். எதிராஜ், ஜூஜின் கிராண்ட் ஆகியோரின் ஜூனியராகப் பணியாற்றி வழக்கறிஞர் வாழ்க்கையைத் தொடங்கியவர் கைலாசம். பின்னர் பப்ளிக் பிராஸிக்யூட்டராக விளங்கி, அப்புறம் பதினாறு ஆண்டுகள் உயர் நீதி மன்ற நீதிபதியாகவும் நான்கு ஆண்டுகள் உச்ச நீதிமன்ற நீதிபதியாகவும் பணியாற்றி ஓய்வு பெற்றார்.

ஒரு வழக்கறிஞரின் வெற்றி அல்லது தோல்வியை விட நீதியின் வெற்றியே முக்கியமானது என்ற மிக உயர்ந்த கொள்கையை உடையவர் கைலாசம். அவர் பப்ளிக் பிராஸிக்யூட்டராகப் (அரசுத் தரப்பு வக்கீல்) பணியாற்றியபோது ஒரு காவல் துறை அதிகாரியின் பதவி பறிக்கப்பட்டு அரசு அவரைக் கட்டாய ஓய்வில் வீட்டுக்கு அனுப்பிவிட்டது. அவர் மீது சாட்டப்பட்ட குற்றங்களில் ஒன்று, அவர் நூறு ரூபாய் லஞ்சம் வாங்கினார் என்பது. வழக்கு விசாரணைக்கு வந்தது. வழக்கறிஞர் வி.எஸ். சுப்பிரமணியம் லஞ்சம் கொடுத்ததாகக் கூறிய சாட்சியை விசாரித்தார். "அந்த அதிகாரிக்கு நீங்களே நேரடியாக லஞ்சம் கொடுத்தீர்களா? யார் உங்களைக் கொடுக்கும்படி தூண்டியது?" என்றெல்லாம் வினவினார்.

சாதாரணமாக, இதுபோன்ற தருணங்களில் அரசுத் தரப்பு வக்கீல் குறுக்கிட்டு, இத்தகைய கேள்விகளுக்கு ஆட்சேபணைகளை எழுப்புவார். ஆனால் கைலாசம் அமைதியாக இருந்தார். சாட்சி பதிலளிக்கையில், தாம் நேரிடையாக அந்த அதிகாரியிடம் லஞ்சம் தரவில்லை என்று சொன்னதோடு நில்லாமல், "இதோ இருக்கிறாரே இவரிடம் தான் ஒப்படைத்தேன். அவரிடம் சேர்ப்பிக்க வேண்டும் என்று கூறி இவர்தான் வாங்கிக் கொண்டார்" என்று மற்றொரு காவல் துறை அதிகாரியைச் சுட்டிக் காட்டினார். வேடிக்கை என்னவென்றால், அப்படி சாட்சியால் சுட்டிக்காட்டப்பட்ட அதிகாரி, தீர்ப்பு வழங்க வேண்டிய டிரிப்யூனலில் ஒருவராக— நீதிபதியாகவே — அமர்ந்திருந்ததுதான்!

சம்பந்தப்பட்டவர்கள் தவிர மற்ற எல்லாரும் சிரிக்க ஆரம்பித்துவிட்டனர். அந்த ஏளனச் சிரிப்பு கைலாசத்தைப் பாதிக்கவில்லை. அவர் உடனே தலைநிமிர்ந்து சொன்னார்: "என்னுடைய வெற்றி தோல்வி முக்கியமில்லை; நீதி நிலைப்பதே முக்கியம். அரசு சார்பில் வழக்கை நான் வாபஸ் பெற்றுக் கொள்கிறேன்!"

கைலாசம் உருவாக்கிய ஜூனியர்கள் பலர் இன்று புகழ் பெற்று விளங்குகின்றனர். உயர் நீதிமன்ற நீதிபதி செங்கோட்டுவேலன், அவர்களில் ஒருவர்.

தொகுப்பு:

**டி. ஆர். ரமேஷ்**

# எம். எல். ஏ வுக்கே இந்தக் கதி தானா?

* 'அரசுக்கு ஒரு பாராட்டு' மூலம் அரசின் நல்ல திட்டத்தை வரவேற்ற 'கல்கித்தனம்' பாராட்டுக்குரியது!

சீர்காழி, பி. கலியமூர்த்தி.

* அட்டையில் பனி படர்ந்த மலையையும், பசுமையான செடிகளையும் பார்த்தபோது, மகிழ்ச்சியில் லேசாக 'விசில்' அடிக்க வேண்டும்போல்தோன்றியது.

நீடாமங்கலம், எஸ்.ஏ. கோவிந்தகுமார்

* கொடைக்கானல் ஹீரோ குர்னிகால் சிங்கை அழகாக, அளவாக அறிமுகப்படுத்தியுள்ளீர்கள்! நெல்லையில் பணியாற்றிய அவர், கொடைக்கானலுக்கு மாற்றப்பட்டபோது நெல்லை மக்கள் அவரைப் பிரிய மறுத்து அழுததையும் குறிப்பிட்டு இருக்கலாம்!

ஈரோடு—2, அருண்.

* 'தொழிற்சாலை வந்தது; தொழிலே கெட்டது' என்ற கட்டுரை பிரமாதம். ஓட்டு வாங்குவதற்காகத் தொழிற்சாலை மட்டும்தான் கட்ட முடியும். காய்கறி கெட்டால் யாருக்கென்ன? அடுத்த பொதுத் தேர்தல் வரையில் முத்து வீராசாமியை காத்திருக்கச் சொல்லுங்கள்!

ஈரோடு—1, இரா. செல்வமணியன்.

* நத்தம் தொகுதி இ. காங்கிரஸ் எம்.எல்.ஏ. ஆண்டி அம்பலம் தமது தொகுதியில் தண்ணீர்ப் பிரச்னையைத் தீர்க்க முடியாமல், சட்டசபையில் பேசியபோதிலும் நடக்காத காரியமாகிவிட்டது என்று மனம் புழுங்கிக் கூறியுள்ளார். ஒரு ஜனநாயக நாட்டில் எம்.எல்.ஏ.வின் சொல்லையே உதாசீனப்படுத்தும்போது, சாதாரண மக்களின் புகார்கள் எந்த மூலைக்கு....? இந்த வேதனைக்குரிய செய்தியை எண்ணி மனம் கொதிக்கிறது.

குடியேற்றம்—2, கோ. ராமலிங்க ஜோதி.

* அரசியலில் வாய்மைக்குப் பஞ்சம், நாட்டிலே தண்ணீர்ப் பஞ்சம், கல்கிக்கு (17.8.86) நகைச்சுவைத் துணுக்குப் பஞ்சம்! கொடுமையடா சாமி!

சென்னை—84, பொடுசி.

* ப.உ.ச. பற்றிய தங்கள் தலையங்கம் 'ரியலி எனைஃ ஒரு சூப்பர் ஹிட்!' ப.உ.ச. என்றுமே ப.உ.ச. தான்! (பத்திரிகை உலகின் சார்லி சாப்ளின்.)

ஸ்ரீரங்கம், ஜி. பத்மா.

* ஒவ்வொருகுடும்பத்திலும்குழப்பங்களும்தொல்லைகளும் உண்டு என்ற உண்மையை அருமையாக விளக்கிய ஜி. நாராயணனின் 'அடுத்த அத்தியாம்' சிறுகதை அருமை.

அரூர், மு. மதிவாணன்.

* கல்கி 10.8.86 இதழில் பம்பாய்த் தமிழ் எழுத்தாளர் சங்கம் பற்றிய செய்தியில் ஒரு திருத்தம் தேவைப்படுகிறது. பம்பாய்த் தமிழ் எழுத்தாளர் சங்கத்தை 24.2.1985 அன்று நாலும் நண்பர் 'இங்கெல்'லுமாகத்தான் துவங்கினோம். 13.4.86 அன்று பொதுக் குழு கூட்டம் வைத்து நிர்வாகிகளைத் தேர்ந்தெடுத்தோம். அன்று நான் தலைவராக்கப்பட்டேன். திரு துரை ஜெயராஜ் அவர்கள் சங்கத்தின் புரவலராக்கப்பட்டார். திரு துரை ஜெயராஜ் அவர்கள் எமது சங்கம் வளர பின்னணியில் நிறைய உதவி வருகிறார்.

பம்பாய்—71, கல்லை. அன்சாரி.

* கல்கி 17.8.86 இதழ் 14 ஆம் பக்கத்தில் எங்களது பி.எஸ்.என்.ஏ. பொறியியற் கல்லூரியின் முகப்புத் தோற்றத்தை மிகச் சிறிய அளவில் போட்டோ எடுத்து வெளியிட்டு எங்கள் கல்லூரி கார்ஷெட்டில் அமைந்திருப்பதாகத் தவறான தகவல் கொடுத்துள்ளீர்கள். திரு. கே. எம். சீனிவாசன் அவர்களைச் சில காரணங்களால் நாங்கள் பணியிலிருந்து விலக்கி அவருக்கு ஒருமாத நோட்டீஸ் கொடுத்திருந்தோம். அந்தச் சமயத்தில் உங்களது நிருபர் அவரை வந்து சந்தித்திருப்பதாகத் தெரிகிறது. எனவேதான் அவரால் சரியான விளக்கங்கள் தர முடியாமல் இருந்திருக்கிறது.

மதுரை காமராஜர் பல்கலைக் கழகத்தின் அனுமதி குழு இக்கல்லூரியை பரிசோதித்து மாணவர்களுக்குத் தேவையான வசதிகள் அனைத்தும் இருந்ததைக் கண்டுதான் கல்லூரியைத் தொடர்ந்து நடத்த அனுமதி அளித்துள்ளது. மதுரை காமராஜர் பல்கலைக் கழகத்தில் எங்களது பொறியியற் கல்லூரி இரண்டாமாண்டு மாணவர்கள் முதலிடம் பெற்றிருக்கிறார்கள்.

அண்ணா பல்கலைக்கழகத்தின் கிண்டி பொறியியற் கல்லூரியில் பதினாறு ஆண்டுகள் முதல்வராகப் பணியாற்றி, கடந்த மே மாதத்தில் ஓய்வு பெற்று இக்கல்லூரிக்கு முதல்வராகப் பொறுப்பேற்றுள்ள பேராசிரியர் திரு. டபிள்யூ. பி. விஜயராகவன் இக்கல்லூரியின் ஆய்வுக் கூடங்கள் மற்றும் விடுதிகளின் வளர்ச்சி குறித்து திருப்தி வெளியிட்டுள்ளார்.

வேறு பல பொறியியற் கல்லூரிகள் தங்கள் மாணவர்களை ஆய்வுக்கூட வசதிகளுக்காக மற்ற பொறியியற் கல்லூரிகளுக்கு அழைத்துச் செல்லும் சமயத்தில், நாங்கள் எங்களது மாணவர்களுக்குத் தேவையான அனைத்து பரிசோதனைக் கூடங்களையும் கல்லூரியின் வளாகத்திற்குள்ளேயே அமைத்துள்ளோம்.

நாங்கள் பொறியியற் பட்டப் படிப்பைத் தவிர வேறு எந்தப் படிப்பும் சொல்லிக் கொடுப்பதில்லை. இதற்கு மட்டுமே 33 ஆசிரியர் பெருமக்களை, பட்ட மேற்படிப்புத் தகுதியுடன் நியமித்து கல்லூரியை நடத்தி வருகிறோம்.

இக்கல்லூரிக்கென்று திண்டுக்கல்லிலிருந்து ஐந்து மைல் தூரத்தில் சுமார் 100 ஏக்கர் நிலம் வாங்கப்பட்டுள்ளது.

திண்டுக்கல், ஆர். எஸ். சோமநாதன், தலைவர், பி. எஸ். என். ஏ. பொறியியற் கல்லூரி.

# “வாழைக்காய் லாரியில் வருகிறார்கள்; மாருதிகாரில் ஏறுகிறார்கள்!”

**புது நடிகைகள் பற்றி இப்படி கோபமாகவும் கிண்டலாகவும் பேசுகிறவர் வினு சக்ரவர்த்தி.**

'நம்ம ஊரு நல்ல ஊரு' படப்பிடிப்பில் இவரைச் சந்தித்தோம். சம கால நடிகையரையும் சாதனை படைத்த நடிகையரையும் ஒப்பிட்டுச் சில விவரங்களைக் கூறினார். அப்போது மகிழ்ச்சியும் வேதனையும் போட்டி போட்டுக் கொண்டு அவர் முகத்தில் மாறி மாறிப் பிரதிபலித்தன!

## கே. ஆர். விஜயா

ஒரு வெளிநாட்டுக் காரில் வந்திறங்கினார் கே. ஆர். விஜயா. அவரிடம் எனக்கு அறிமுகமில்லை. அதனால் பேசாமலிருந்தேன்.

விஜயாவே வலுவில் ''வணக்கம் வினு சக்கரவர்த்தி சார்'' என்று சொன்னவிதம் நான் அவருடன் பத்தாண்டுகள் சேர்ந்து நடித்திருப்பது போன்ற உணர்வை உடனே ஏற்படுத்தியது. தொடர்ந்து அவர், ''நீங்க நடிச்ச படங்கள் நிறையப் பார்த்திருக்கிறேன். 'கோபுரங்கள் சாய்வதில்லை'யில் உங்கள் நடிப்பு சூபர்ப். ஆமாம். ஏன் கொஞ்சம் இளைத்திருக்கிறீர்கள்?'' என்று வினவினார்.

அவரது சாதனைகளுடன் ஒப்பிடும்போது அணு அளவு கூடச் சாதிக்காத இக்கால நடிகையர், நாம் ஏதோ, காட்டிலிருந்து வந்



திருப்பது போலப் பழகுவது வேதனையே. விதிவிலக்காகச் சிலர் உண்டு.

கே.ஆர். விஜயாவுடன் பேசிக் கொண்டிருந்தபோது புதிதாக ஒரு விஷயம்,காப்பி சாப்பிடுவதைவிட டீ சாப்பிடுவது நல்லது என்று தெரிந்து கொண்டேன்.

### ஸ்ரீவித்யா

ஒரு புதுப்பட பூஜையில் ஸ்ரீவித்யாவைப் பிரபு அறிமுகம் செய்து வைத்தார். கண்களால் கவிதை படைப்பவர் ஸ்ரீவித்யா. "நான் உங்கள் விசிறி. எம். ஆர். ராதா, எஸ்.வி. ரங்காராவ், டி.எஸ். பாலையாவுக்குப் பின் உங்களது குணச்சித்திர நடிப்பு பிரமாதம்" என்றார்.

ஸ்ரீவித்யாவின் பணிவையும் பழகும் விதத்தையும் இக்கால நடிகையருடன் ஒப்பிட்டுப் பார்க்கிறேன்.

புதிதாக வரும் நடிகையர் தயாரிப்பாளரையோ, டைரக்டரையோ மதிப்பதில்லை. கேமிராமேனை மட்டும் தாஜா செய்து கொள்கிறார்கள். கூட நடிப்பவர்களை கொத்தடிமைகள் போல நினைக்கிறார்கள். காரணம் வாழைக்காய் லாரியில் வரும் இவர்களை சினிமா உலகம் உடனே மாருதி காரில் ஏற்றுகிறது. அடுத்த நிமிடமே ஏர்கண்டிஷன் அறையில் தங்க ஏற்பாடு செய்யப்படுகிறது.' கஷ்டப்படாமல் திடீர் அதிர்ஷ்டம் அடிக்கும்' போது பிறரை எப்படி மதிப்பார்கள்?

### லட்சுமி

'பாலைவன ரோஜாக்கள்' படப்பிடிப்பு. நான் மந்திரியாகவும் லட்சுமி கலெக்டராகவும் நடித்தோம்.

"குட்மார்னிங் சார்" என்று அவரே கூறிவிட்டு, "நீங்கள் நடித்த பல படங்களைப் பார்த்திருக்கிறேன். நீங்களே ஒரு கதாசிரியராகவும் இருப்பதால் சில இடங்களில் நடிப்பதே இல்லை" என்றார். எனக்கு ஒரே அதிர்ச்சி. தொடர்ந்து லட்சுமி, "ஒரு சிறந்த மியூசிக் டைரக்டர் என்றால் முதலில் எங்கெங்கே வாத்தியங்களை வாசிக்கக் கூடாது என்பது தெரிந்திருக்க வேண்டும்" என்று பித்தோவனைப் பற்றி ஒரு கட்டுரையில் தாம் படித்ததைக் கூறினார். அதைக் கேட்ட பிறகுதான் எனக்கு இயல்பாக மூச்சுவிட முடிந்தது!

லட்சுமி தனிமையை அதிகம் விரும்புவதாகக் கூறினார். தனிமையில் மனம் சங்கடப்பட்டு தூக்கம் வராத நேரங்களில்தான் பவர் ஷூஸ் அணிந்து கொண்டு ஸ்கிப்பிங் ஆடுவதாகக் கூறினார். வியர்க்க வியர்க்க ஸ்கிப்பிங் ஆடி, பிறகு குளித்துவிட்டுப் படுத்தால் நித்திரை சுகமாக வரும் என்பதை அறிந்து கொண்டேன். லட்சுமியைச் சந்திக்கும் பலருக்கு அவரையே நினைத்துத் தூக்கம் கெட்டிருக்கும். எனக்கோ அவரால் நல்ல தூக்கம் கிடைத்து வருகிறது!

— மன்னை சௌரிராஜன்



வாழ்க்கை வாழ்வதற்கே ?

# நெஞ்சை உருக்கும் கண்ணீர்க் கடிதம்

''**வா**ழ்க்கை வாழ்வதற்கே என்று சுலபமாக எழுதி விடுகிறீர்கள்; ஆனால் வாழ்க்கை ஏமாறுவதற்கே என்பதுதான் சரி'' என்று தனது கண்ணீர்க் கடிதத்தைத் தொடங்குகிறாள் மதுரையைச் சேர்ந்த மங்கா. (ஊரும் பேரும் மட்டும் கற்பனை — அவள் விருப்பப்படி) மங்கம்மா பிறந்து வளர்ந்தது, குடும்பம் நடத்தியது எல்லாம் பம்பாயில். கொத்து வேலை செய்யும் மேஸ்திரியான அவள் கணவன் கதிரேசனை ஒருநாள் சிலர் நைஸாக அணுகி, உயிராபத்தான நிலையில் உள்ள யாருக்கோ ரத்தம் தேவைப்படுகிறது என்று கூறி அழைத்துப் போயிருக்கிறார்கள். கதிரேசனும் பெருமிதத்துடன் ரத்த தானம் செய்திருக்கிறான். சில தினங்கள் சென்று அதே ஆசாமிகள் கதிரேசனிடம் திரும்பவும் வந்து, ''என்ன ஒரு மாதிரி சோகையா இருக்கிறாயே? விட்டமின் ஊசி போட்டால் சரியாகிவிடும், வா!'' என்று தாஜா செய்து அழைத்துப் போயிருக்கிறார்கள். அப்புறம் ஒரு வார காலம் கதிரை வீடு திரும்பவே இல்லை!

கவலையால் கண்களும் மனமும் கனக்க மங்கா காத்திருக்கிறாள். எட்டாம் நாள் அதே நபர்கள் இவளிடம் வந்து, கதிரை யாரோ உறவினரைப் பார்க்க அவசரமாக மதுரை செல்வதாகவும் . இவளை நேரே ஸ்டேஷனுக்கு வரச் சொன்னதாகவும் கூறி டிக்கெட்டும் தருகிறார்கள். தாதர் ஸ்டேஷனில் கதிரையின் முகம் களையிழந்து காணப்படுகிறது. துருவித் துருவி மங்கா கேட்டும் பதிலேதுமில்லை. ரயில் புறப்பட்டுச் சற்று நேரமான பிறகுதான், ''நான் மோசம் போய் விட்டேன், மங்கா!'' என்று கண்களில் கண்ணீர் தளும்பக் கூறுகிறான் கதிரை. நடந்தது என்ன?

முதலில் ரத்த தானம் என்று கூறி அழைத்துப் போனபோது சில பரிசோதனைகளை நிகழ்த்திப் பார்த்திருக்கிறார்கள். ஓ.கே. என்று தீர்மானமான பிறகு, இரண்டாவது தடவை அழைத்துப் போய், மயக்கம் தந்து, கதிரையின் இரு சிறுநீரகங்களில் ஒன்றை எடுத்து, இரு சிறுநீரகங்களும் பழுதுபட்டுப் போன ஓர் அராபியனுக்கு சிறுநீரக மாற்று ஆபரேஷன் செய்திருக்கிறார்கள். பணத்தில் மிதக்கும் அந்த அராபியனிடமிருந்து இதற்காக ஒன்றரை லட்சம் ரூபாய் பறித்திருக்கிறார்கள். இதில் கதிரையிடம் பத்தாயிரம் ரூபாய் மட்டுமே தந்து, ''இனி பம்பாய் பக்கம் தலைகாட்டினால் உன் தலையே இருக்காது!'' என்று மிரட்டியிருக்கிறார்கள்.

இந்தக் கதையை எழுதிவிட்டு, ''என் கணவர் இன்னும் எத்தனை நாள்தான் உயிர் வாழ்வார்?'' என்று கேட்கும் மங்காவுக்கு நான் இன்னொரு உண்மைக் கதையைக் கூற வேண்டியிருக்கிறது:

என் நெருங்கிய நண்பரின் மகன் ரகுபதி (கற்பனை — பெயர் மட்டும்) வேலையில்லாப் பட்டதாரி. மனமொடிந்த நிலையில், 'மாற்றுச் சிறுநீரகம் தேவை' என்று ஒரு விளம்பரத்தைப் பார்த்தான். ஐம்பதாயிரத்துக்குத் தனது சிறுநீரகம் ஒன்றைத் தருவதாகக் கூறினான். பேரம் பேசினார்கள். 35,000 க்கு ஒப்புக் கொண்டான். பணம் இவன் பெயரில் பாங்கில் போடப்பட்ட பிறகு ஆபரேஷனுக்கு உடன்பட்டான். உடல் தேறி, நன்றாக நடமாடவும் செய்தான். ஆனால் என்ன துரதிர்ஷ்டம் பாருங்கள், திடீரென்று 35,000 ரூபாய் கிடைத்த ஜோரில் குடி, கூத்தி, சூதாட்டம் என்று விளையாட ஆரம்பித்தான். அத்தனை பணத்தையும் வேட்டு விட்டுவிட்டு இன்று சல்லிக் காசு இல்லாமல் மறுபடி தெருத் தெருவாகத் திரிந்து அலைகிறான்!

''மங்கா! சகோதரி! சற்று யோசித்துப் பார்; உன் கணவருடைய நிலை ரகுபதியின் நிலையைவிட மோசமானதா? உன் கணவர் கதிரேசன் ஏமாற்றப்பட்டார்; ரகுபதியோ தன்னைத்தானே ஏமாற்றிக் கொண்டான்! உன் கணவருக்கு யாரோ ஓர் அந்நியனுக்கு உயிர் கொடுத்த பெருமை இருக்கிறது; ரகுபதிக்கோ தன்னைத் தானே அழித்துக் கொண்ட சிறுமைதான் மிஞ்சுகிறது! வாழத் தெரியாதவன் ரகுபதிதான்; உன் கணவரல்ல!

''சகோதரி! உன் கணவரின் தேக ஆரோக்கியத்துக்காக நாங்கள் அனைவரும் பிரார்த்தித்துக் கொள்கிறோம். கலங்காதே! தைரியமாக வாழ்க்கையை எதிர் கொள்!''

— ஜீவன்

* என்.வி.எஸ். மணி, பம்பாய்

? கல்கி என்ற அந்தப் பெரிய எழுத்தாளரின் பெயர் கொண்ட கல்கி பத்திரிகை அட்டைப் படங்களில் சினிமா நட்சத்திரங்களைப் போட வேண்டுமா?

! கல்கி அவர்களே எத்தனையோ (அந்தக் காலத்திய) சினிமா நட்சத்திரங்களின் படங்களை, இப்பத்திரிகையின் அட்டைப் படத்திலும், உள்ளேயும் போட்டிருக்கிறார். ஒருவேளை நீங்கள் பார்த்திருக்க மாட்டீர்கள்.



திரைப்படம் என்பது ஒரு சக்தி வாய்ந்த சாதனம், மக்களைக் கவர்கின்ற விஷயம் என்பதில் கல்கிக்கு நம்பிக்கை உண்டு. அது சரியான முறையில் பயன்படுத்தப்பட வேண்டும் என்ற கவலையும் உண்டு. கல்கி அவர்களே திரைப்படத் துறையில் நேரடியாகச் சம்பந்தப்பட்டதும் உண்டு.

* அர. மணிவண்ணன், ஆலந்தூர்

? டி.வி.யில் சிவாஜி வழங்கிய மலரும் நினைவுகள் பார்த்தீர்களா? கலைஞரைப் பற்றி ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லையே, ஏன்?

! கலைத் துறையில் கூட அரசியல் விருப்பு வெறுப்புகளும் காழ்ப்புணர்ச்சிகளும் புகுந்து கொண்டிருக்கின்றன என்கிற பரிதாப நிலையைத்தான் இது சுட்டிக் காட்டுகிறது. மிகப் பெரிய நடிகைகள் என்று அவர் சுட்டிக்காட்டிய பட்டியலில் முக்கிய இடம் பெற்றவர்கள் வைஜயந்தி மாலாவும், ஜெயலலிதாவும்தானே!

* வி. அருண், கிரமங்கலம்

? அந்தக் கால திரைப் பாடல்களை ரசித்துக் கேட்பது போல் இப்போதைய பாடல்களைக் கேட்க முடிவதில்லையே, ஏன்?

! உங்களுக்கு வயதாகிவிட்டது ஒரு காரணமாயிருக்கக்கூடும். எந்தக் காலத்திலும் நினைவில் நிற்கும் பாடல்களும் காற்றோடு கலந்துவிடுகிற பாடல்களும் உண்டு.

* வசந்தப் பிரியன், சீர்காழி

? சுதந்திர தினத்தன்று எம்.ஜி.ஆர். பேசி



யதைக் கேட்டீர்களா?

! அவரைப் பேசச் சொல்லி வற்புறுத்துவது அவரைக் கொடுமைப்படுத்துவது போன்றதுதான். அவர் பேச்சை வேறு ஒருவர் படித்தால் ஒன்றும் குடிமுழுகிப் போய் விடாது. ஒருவேளை அனுதாபத்தைப் பெருக்கிக் கொள்ள இப்படிச் செய்கிறார்களோ, என்னவோ?

* எஸ். பிரியதர்சினி, மதுரை *

? உள்நாட்டுப் பிரச்னைகளைக் கவனிக்காமல் உலக நாடுகள் விஷயங்களில் ராஜீவ் அதிக அக்கறை காட்டுவதாக சஞ்சீவ ரெட்டி சாடுகிறாரே?

**சிவாஜி வழங்கிய மலரும் நினைவுகள் பார்த்தீர்களா?**

! உத்யோகத்தில் இருக்கும்வரை குழைவது, ஓய்வு பெற்ற பின் சாடுவது என்பது பலருக்கும் ஒரு பலவீனம். ஜனாதிபதிகள் கூட அதற்கு விதிவிலக்கல்ல. இருப்பினும் சாடலில் அர்த்தம் இருந்தால் ஏற்றுக்கொள்ள வேண்டியதுதான். ஆனால் ரெட்டி காருவின் இந்தக் குற்றச்சாட்டு அர்த்தமற்றது. ஒரு நாட்டின் பிரதமர் உள்நாட்டுப் பிரச்னைகளுடன் உலகப் பிரச்னைகளுக்கும் முக்கியத்துவம் தர வேண்டியவரே. உலகப் பிரச்னைகளை சாணக்கியத்துடன் அணுகாவிட்டால் அவை உள்நாட்டுப் பிரச்னைகளையும் பாதிக்கக் கூடும்.

* மா. அய்யப்பன், நாட்டரசன்பேட்டை

? நாங்கள்தான் உண்மையான இ. காங்கிரஸ்காரர்கள் என்கிறாரே பிரணாப் முகர்ஜி?

! நம்ம ஊர் தங்கராசு சமாசாரம்!



* ரஜினி சுகுமார், சென்னை — 11

? உண்மையான திராவிடர் கழகம் எங்களுடையதுதான் என்று திருவாரூர் தங்கராசு கூறுகிறாரே?

! இதைக் கேட்க நேர்ந்தால் பெரியாரே ரத்தக் கண்ணீர் வடிக்கக் கூடும்!

* தி.சு. பாலசுப்பிரமணியன், ஜெயங்கொண்டம்

? லாட்டரியை எதிர்க்கும் நீங்கள் குலுக்கல் முறையில் ஸூட்கேஸ், யூட்டுப் புடைவை பரிசு அளித்து வருகிறீர்களே, சரியா?

! அதில் அதிர்ஷ்டம் மட்டுமே விளையாடுகிறது. இதில் அறிவுக்கு நிறைய வேலை இருக்கிறது. வாசகர்கள் தங்கள் எண்ணங்களை, அனுபவங்களை ஒருவருக்கொருவர் பகிர்ந்து கொள்ளவும் அதன் மூலம் பயனடையவும் வாய்ப்பளிக்கிறது கல்கி. லாட்டரிச் சீட்டு வாங்கக் கொடுக்கப்படும் பணம் அரோகரா. கல்கி வாங்கத் தரப்படும் காசில் விலை மதிக்க முடியாத நற்பலன்களை வாசகர்கள் பதிலுக்குப் பெறுகிறார்கள். லாட்டரி சூதாட்டத்தை வளர்க்கிறது. கல்கியின் பரிசுத் திட்டங்கள் எழுத்தார்வத்தைத் தூண்டுகின்றன. கல்கி செய்வது சரியா, தப்பா? இப்போது நீங்களே முடிவு கட்டுங்கள்!

* கே.வி.எஸ். மணியன், குடியாத்தம்

? வை ஜயந்திமாலா ரசிகர் மன்றம் ஆரம்பித்து இருப்பது எதற்காக?

! கே.பி. சுந்தராம்பாள் ரசிகர் மன்றம் என்று ஆரம்பிக்க முடியாததால் இருக்கலாம்!

* துரை இராஜேந்திரன், திருப்பூர்

? 'நூறு இளைஞர்களை என்னிடம் கொடுங்கள். நவீன பாரதத்தை உருவாக்கிக் காட்டுகிறேன்' என்றவர் இன்று இருந்தால்....?

! வேஷங்களுக்கு அடிமைபபடாத ஐம்பது இளைஞர்கள் தம்மைப் பின்பற்றினால் கூடப் போதும் என்று அவர் கருதக் கூடும். ஏனெனில் அவர் சாதனை எண்ணிக்கையில் அல்ல; சத்தியத்தில் நிற்பது. மக்களுக்குச் சேவை புரிந்து அவர்களிடம் மனமாற்றத்தை ஏற்படுத்துவதன் மூலம் நவீன பாரதத்தை உருவாக்க எண்ணியவர் அவர். அதிகாரத்தில் அமர்ந்து கொண்டு அவரைப் போல் வேஷம் கட்டுபவர்களால் அதைச் சாதிக்க முடியாது!

* ஆர். கே. அருள்செல்வன், விக்கிரபாண்டியம்

? ஒரு ஜோக் சொல்லுங்களேன்?

! கம்யூனிஸ்ட் ரஷ்யாவிலிருந்து இந்தியாவுக்குச் சுற்றுலா வந்து திரும்பிய ஒருவருக்குக் கடவுள் நம்பிக்கை வந்துவிட்டது! 'எப்படி, எதனால் இந்த மாற்றம் ஏற்பட்டது?' என்று ருஷ்ய அதிகாரிகள் குடைந்தெடுத்துவிட்டனர் அவரை. 'கோயில்களைப் பார்த்ததாலா? அல்லது மக்களின் வாழ்க்கை முறையைக் கண்டதினாலா?' 'அதெல்லாம் இல்லை' என்றார் ஊர் திரும்பிய ருஷ்யர். 'தமிழ்நாட்டுக்குப் போயிருந்தேன். அங்கே முதல்வர் ஒரு காரியமும் செய்வதில்லை; அமைச்சர்கள் கையைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருக்கிறார்கள்; அதிகாரிகள் செயலற்றுப் போயிருக்கிறார்கள். அரசாங்கமே ஸ்தம்பித்துப் போயிருக்கிறது. ஆனாலும் என்ன ஆச்சர்யம்! மக்களின் வாழ்க்கை எப்படியோ நடந்து கொண்டிருக்கிறது! எனவே, நம் கண்களுக்குப் புலப்படாத, ஒரு சர்வ வல்லமை படைத்த சக்தி இயங்கி, மக்களை வழிநடத்திச் சென்று கொண்டிருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்தேன்; அந்தக் கடவுளிடம் நம்பிக்கை பிறந்துவிட்டது!'

ரூ 10 பரிசு பெறுபவர்:
எஸ். பிரியதர்சினி,
48B, கருகப்பிள்ளைக்காரத் தெரு,
மதுரை — 625 001.















கருத்து:
கடுவை கோபால்சாமி


Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600 032. (Phone: 431543).
Assistant Editor: P. S. Mani. Editor: K. Rajendran.

